# செந்தமிழ் இலக்கணம்

**(Forms I, II & III)**

ஆக்கியோன்:

**வித்துவான், V. நரச[illegible]**

*Tamil Pandit, All Saints' S. P. G. Girls [illegible] School,*
*Trichinopoly.*









T. G. கோபால பிள்ளை
தெப்பக்குளம் :: திருச்சிராப்பள்ளி

பதிப்புரிமை] 1938 [விலை அணா 9

# முகவுரை

மொழித் தேர்ச்சிக்கு இலக்கண அறிவு இன்றியமை-யாதது என்பது யாவரும் அறிந்ததே. தமிழிலக்கணமானது புலவர் பெருமக்களான அகத்தியர், தொல்காப்பியர் முத-லிய நம் முன்னோரால் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே வரையறுக்கப்பட்டு நூல்கள் வாயிலாக வெளி வந்துள்ளது.

இங்ஙனமமைந்த தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கண நூல்களைத் தமிழ் கற்கும் இளஞ்சிறார் ஓதி அறி-வது சிரம சாத்தியமாயினமையின், தற்காலத்தில் வசன நடையில் பல சிற்றிலக்கண நூல்கள் மாணவரது அறிவின் தரத்திற்கு ஏற்றவாறு வகுக்கப்பட்டுள்ள பாட திட்டத்-திற்கு இயைந்தனவாய்ப் புதிது புதிதாக வெளிவருகின்றன.

அவ்வாற்றான் வெளிவந்த இந்நூல் முதல் மூன்று பாரவகுப்புக்களுக்கு ஏற்றவாறு எழுதப்பட்டுள்ளது. இதனுள் நூதன போதன முறையின் நோக்கத்திற்கொத்த பல அமிசங்களும் பொருந்தியுள்ளன. ஆங்காங்குத் தக்க அளவில் பயிற்சிகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழாசிரியரும் கல்வி இலாக்கா அதிகாரிகளும் இதனை ஆதரிக்குமாறு வேண்டுகின்றேன்.

இப்புத்தகத்தை அச்சிடுதல் ஒப்பு நோக்குதல் முதலிய அரிய உதவிகள் புரிந்த அன்பர்கட்கு எனது மனமார்ந்த வந்தனம் உரியதாகும்.

இங்ஙனம்,

V. நரசிம்மையர்

# பொருளடக்கம்

## முதல் பாரம்

பொருள் பக்கம்

## மூன்றும் பாரம்

பொருள் பக்கம்

## II. சொல்

# செந்தமிழ் இலக்கணம்

## முதல் பாரம்

தமிழ் மொழியைத் திருத்தமாகப் பேசவும் எழுதவும் கற்பிக்கும் நூல் தமிழ் இலக்கணம் ஆகும்.

### எழுத்து

1. நாம் நமது கருத்தைப் பிறருக்கு அறிவிக்கச் சொற்களை உபயோகித்துப் பேசுகிறோம். இந்தச் சொற்களைக் கவனித்தால், இவை பல ஒலிகளால் ஆகியிருப்பதை அறியலாம். உதாரணமாக, 'இராமன்' என்னும் சொல்லில் இ, ரா, ம, ன் என்னும் நான்கு ஒலிகள் அமைந்திருக்கின்றன. இவ்விதம் சொல் உண்டாவதற்குக் காரணமாக உள்ள ஒலிகள் எழுத்து எனப்படும். இவ்வெழுத்துக்கள் பேசும்போது ஒலி வடிவத்தையும், எழுதும்போது வரி வடிவத்தையும் பெறும். எனவே, சொல் உண்டாவதற்குக் காரணமாக உள்ள ஒலியே எழுத்தாகும்.

### உயிரெழுத்துக்கள்

2. தமிழ் எழுத்துக்களுள் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ என்னும் இப்பன்னிரண்டும் உயிரெழுத்துக்கள் எனப்படும். இவ்வெழுத்துக்கள் உயிர்களைப்போலத்

தாமே இயங்க வல்லவைகளாக இருத்தலின், இப்பெயர் பெற்றன. உயிர் எழுத்துக்கள் குற்றெழுத்து, நெட்டெழுத்து என இரு வகைப்படும்.

3. குற்றெழுத்து :— உயிரெழுத்துக்களில் அ, இ, உ, எ, ஒ என்னும் இவ்வைந்தும் குறுகிய ஓசையுடையவை; ஆதலால், இவை குறில் அல்லது குற்றெழுத்து எனப் படும்.

4. நெட்டெழுத்து :— ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் இவ்வேழும் நீண்ட ஓசையுடையவை; ஆதலால், இவை நெடில் அல்லது நெட்டெழுத்து எனப்படும்.

## மெய்யெழுத்துக்கள்

5. தமிழ் எழுத்துக்களில் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் என்னும் இப்பதினெட்டும் மெய்யெழுத்துக்கள் எனப்படும். இவை உயிரெழுத்துக் களின் உதவியால் இயங்கும் தன்மையுடையவாய் இருத் தலின், இப்பெயர் பெற்றன.

மெய்யெழுத்துக்கள் உடம்பு, புள்ளி, ஒற்று என்றும் பெயர் பெறும்.

குறிப்பு :—மெய்யெழுத்துக்களை க், ங், ச் என இவ்வாறு புள்ளியிட்டு எழுதினும், அவைகளை உச்சரிக்கும்போது 'அ' என்னும் உயிரெழுத்தைச் சேர்த்து, மேலுள்ள புள்ளிகளை நீக்கிக் க, ங, ச என்றாவது, 'அ' என்பதோடு 'கரம்' என்பதை யும் சேர்த்துக் ககரம், ஙகரம், சகரம் என்றாவது உச்சரிக்க வேண்டும். இதனால் மெய்யெழுத்துக்கள் உயிரெழுத்துக்களின் உதவியாலேயே உச்சரிக்க வேண்டியிருத்தலைக் காண்க.

மெய்யெழுத்துக்கள் ஓசை காரணமாக மூவகைப்படும். அவை வல்லினம், மெல்லினம், இடையினம் என்பனவாம்.

6. வல்லினம் :—க், ச், ட், த், ப், ற் என்னும் ஆறும் வலிய ஓசையுடையவை. ஆதலால், இவை வல்லினம் எனப் படும்.

7. மெல்லினம் :—ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் ஆறும் மெலிந்த ஓசையுடையவை. ஆதலால், இவை மெல்லினம் எனப்படும்.

8. இடையினம் :—ய், ர், ல், வ், ழ், ள் என்னும் ஆறும் இடைப்பட்ட ஓசையுடையவை. ஆதலால், இவை இடையினம் எனப்படும்.

குறிப்பு :—வல்லினம், வலி, வன்கணம், வன்மை எனவும்; மெல்லினம், மெலி, மென்கணம், மென்மை எனவும்; இடையினம், இடை, இடைக்கணம், இடைமை எனவும் பெயர்கள் பெறும்.

## உயிர்மெய்யெழுத்துக்கள்

9. மேற்கூறிய உயிரும் மெய்யும் சேர்ந்து உண்டாகும் எழுத்துக்கள் உயிர்மெய்யெழுத்துக்கள் எனப்படும்.

(உ - ம்.) க் + அ = க; த் + ஆ = தா; ந் + ஈ = நீ.

பன்னிரண்டு உயிரும் தனித்தனி பதினெட்டு மெய்களோடும் சேர்வதனுல் உண்டாகும் மொத்த உயிர்மெய் யெழுத்துக்கள் (18 × 12 = 216) இருநூற்றுப்பதினறு ஆகும்.

உயிரெழுத்தின் வகையினுலும், மெய்யெழுத்தின் வகையினுலும் உயிர்மெய்யெழுத்துக்கள் ஐந்து வகைப்படும்.

அவையாவன, உயிர்மெய்க் குற்றெழுத்துக்கள், உயிர்மெய் நெட்டெழுத்துக்கள், வல்லின உயிர்மெய்யெழுத்துச்கள், மெல்லின உயிர்மெய்யெழுத்துக்கள், இடையின உயிர்மெய் எழுத்துக்கள் என்பனவாம்.

10. உயிர்மெய்க் குற்றெழுத்துக்கள் :—உயிர்க் குற்றெழுத்துக்கள் ஐந்தும் தனித்தனி பதினெட்டு மெய்களோடும் சேர்வதனல் உண்டாகும் (18 × 5 = 90) தொண்ணூறு எழுத்துக்களும் உயிர்மெய்க் குற்றெழுத்துக்களாம்.

11. உயிர்மெய் நெட்டெழுத்துக்கள் :—உயிர் நெட்டெழுத்துக்கள் எழும் தனித்தனி பதினெட்டு மெய்களோடும் சேர்வதனல் உண்டாகும் (18 × 7 = 126) நூற்றிருபத்தாறு எழுத்துக்களும் உயிர்மெய் நெட்டெழுத்துக்களாம்.

12. வல்லின உயிர்மெய்யெழுத்துக்கள் :—வல்லின மெய்கள் ஆறும் தனித்தனி பன்னிரண்டு உயிர்களோடும் சேர்வதனல் உண்டாகும் (6 × 12 = 72) எழுபத்திரண்டு எழுத்துக்களும் வல்லின உயிர்மெய்யெழுத்துக்களாம்.

13. மெல்லின உயிர்மெய்யெழுத்துக்கள் :—மெல்லின மெய்கள் ஆறும் தனித்தனி பன்னிரண்டு உயிர்களோடும் சேர்வதனல் உண்டாகும் (6 × 12 = 72) எழுபத்திரண்டு எழுத்துக்களும் மெல்லின உயிர்மெய்யெழுத்துக்களாம்.

14. இடையின உயிர்மெய்யெழுத்துக்கள் :—இடையின மெய்கள் ஆறும் தனித்தனி பன்னிரண்டு உயிர்களோடும் சேர்வதனல் உண்டாகும் (6 × 12 = 72) எழுபத்திரண்டு எழுத்துககளும் இடையின உயிர்மெய்யெழுத்துக்களாம்.

உயிர்மெய்க் குற்றெழுத்துக்கள் (18 × 5 = 90) — உயிர்மெய் நெட்டெழுத்துக்கள் (18 × 7 = 126)

| | அ | இ | உ | எ | ஒ | | ஆ | ஈ | ஊ | ஏ | ஐ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கி | கு | கெ | கொ | க் | கா | கீ | கூ | கே | கை | கோ | கௌ |
| ங் | ங | ஙி | ஙு | ஙெ | ஙொ | ங் | ஙா | ஙீ | ஙூ | ஙே | ஙை | ஙோ | ஙௌ |
| ச் | ச | சி | சு | செ | சொ | ச் | சா | சீ | சூ | சே | சை | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞி | ஞு | ஞெ | ஞொ | ஞ் | ஞா | ஞீ | ஞூ | ஞே | ஞை | ஞோ | ஞௌ |
| ட் | ட | டி | டு | டெ | டொ | ட் | டா | டீ | டூ | டே | டை | டோ | டௌ |
| ண் | ண | ணி | ணு | ணெ | ணொ | ண் | ணா | ணீ | ணூ | ணே | ணை | ணோ | ணௌ |
| த் | த | தி | து | தெ | தொ | த் | தா | தீ | தூ | தே | தை | தோ | தௌ |
| ந் | ந | நி | நு | நெ | நொ | ந் | நா | நீ | நூ | நே | நை | நோ | நௌ |
| ப் | ப | பி | பு | பெ | பொ | ப் | பா | பீ | பூ | பே | பை | போ | பௌ |
| ம் | ம | மி | மு | மெ | மொ | ம் | மா | மீ | மூ | மே | மை | மோ | மௌ |
| ய் | ய | யி | யு | யெ | யொ | ய் | யா | யீ | யூ | யே | யை | யோ | யௌ |
| ர் | ர | ரி | ரு | ரெ | ரொ | ர் | ரா | ரீ | ரூ | ரே | ரை | ரோ | ரௌ |
| ல் | ல | லி | லு | லெ | லொ | ல் | லா | லீ | லூ | லே | லை | லோ | லௌ |
| வ் | வ | வி | வு | வெ | வொ | வ் | வா | வீ | வூ | வே | வை | வோ | வௌ |
| ழ் | ழ | ழி | ழு | ழெ | ழொ | ழ் | ழா | ழீ | ழூ | ழே | ழை | ழோ | ழௌ |
| ள் | ள | ளி | ளு | ளெ | ளொ | ள் | ளா | ளீ | ளூ | ளே | ளை | ளோ | ளௌ |
| ற் | ற | றி | று | றெ | றொ | ற் | றா | றீ | றூ | றே | றை | றோ | றௌ |
| ன் | ன | னி | னு | னெ | னொ | ன் | னா | னீ | னூ | னே | னை | னோ | னௌ |

## வல்லின உயிர்மெய்யெழுத்துக்கள் (6 × 12 = 72)

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |

## மெல்லின உயிர்மெய்யெழுத்துக்கள் (6 × 12 = 72)

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

## இடையின உயிர்மெய்யெழுத்துக்கள் (6 × 12 = 72)

| | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |

## ஆய்த எழுத்து

15. ஃ இங்ஙனம் மூன்று புள்ளி வடிவமாக எழுதப் படும் எழுத்து ஆய்த எழுத்து எனப்படும். இதனை அஃகேனம் என்றும் சொல்லுவார்கள்.

16. எனவே, தமிழ் எழுத்துக்கள் உயிரெழுத்து, மெய் யெழுத்து, உயிர்மெய்யெழுத்து, ஆய்த எழுத்து என நான்கு வகைப்படும்.

17. உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும், உயிர் மெய் இருநூற்றுப் பதினாறும், ஆய்தம் ஒன்றும் ஆக மொத் தம் தமிழ் எழுத்துக்கள் இருநூற்று நாற்பத்தேழாம். இத னைத் தமிழ் நெடுங்கணக்கு என்பார்கள்.

பயிற்சி :

எழுத்தாவது யாது? உயிர் எழுத்துக்கள் எவை? மெய் எழுத்துக்கள் எவை? உயிர்மெய்யெழுத்து எத்தனை வகைப்படும்? அவை எவை? ஆய்த எழுத்தாவது யாது? குற்றெழுத்துக்கள் எவை? நெட்டெழுத்துக்கள் எவை? வல்லின எழுத்துக்கள் எவை? மெல்லின எழுத்துக்கள் எவை? இடையின எழுத்துக் கள் எவை?

பின் வரும் வாக்கியத்திலுள்ள உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் ஆகிய எழுத்துக்களைத் தனித்தனி எடுத்து எழுதுக :—

இஃது எஃகாற்செய்யப்பெற்ற ஒரு கத்தி.

பின் வரும் வாக்கியத்திலுள்ள வல்லின மெல்லின இடை யினங்களை எடுத்து எழுதுக :—

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

பின் வரும் வாக்கியத்திலுள்ள உயிர்மெய் எழுத்துக்கள் இன்ன வகையைச் சார்ந்தனவென்பதைக் குறிக்க :—

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்.

## சுட்டெழுத்துக்கள்

18. அவன், இவன், உவன்—இவை முறையே அந்த மனிதன், இந்த மனிதன், உந்த மனிதன் எனப் பொருள் படும். அப்பலகை, இவ்வீடு, உப்பக்கம் இவை முறையே அந்தப் பலகை, இந்த வீடு, உந்தப் பக்கம் எனப் பொருள் படும். இவற்றுள் அவன், அப்பலகை என்பவைகளில் உள்ள அ என்பது தூரத்திலுள்ளவற்றைச் சுட்டிக் காட்ட வந்தது. இவன், இவ்வீடு என்பவைகளில் உள்ள இ என்பது சமீபத்திலுள்ளவற்றைச் சுட்டிக் காட்ட வந்தது. உவன், உப்பக்கம் என்பவைகளில் உள்ள உ என்பது பின் புறத்திலும், மேற் புறத்திலும், நடுவிலும் உள்ளவற்றைச் சுட்டிக் காட்ட வந்தது. ஆதலால், அ, இ, உ என்னும் இம்மூன்று எழுத்துக்களும் சுட்டிக்காட்டும் பொருளில் வரும்போது சுட்டெழுத்துக்களாம்.

குறிப்பு :—சுட்டிக்காட்டும் பொருளில் வராவிட்டால், இவை சுட்டெழுத்துக்கள் ஆகா.

(உ - ம்.) அரசன், இடையன், உலகம்.

அந்த, இந்த, உந்த என்பவை முறையே அ, இ, உ என்பவற்றின் விகாரங்களேயாம்.

இச்சுட்டெழுத்துக்களில் அ, இ என்பவைகளும் அவற்றின் விகாரங்களாகிய அந்த, இந்த என்பவைகளும் உலக வழக்கு, செய்யுள் வழக்கு இரண்டிலும் வரும். உ, உந்த என்பவை செய்யுள் வழக்கில் மட்டும் வரும்.

## வினவெழுத்துக்கள்

19. எவன்? எவள்? யாவர்?—இவை முறையே எந்த மனிதன்? எந்தப் பெண்? எந்த மனிதர்? எனப் பொருள் படும்.

இவற்றுள் எ, ஏ, யா என்பவை வினப்பொருளில் வந்துள்ளன. இவ்வாறே, இராமனா சென்றான்? வேலனோ வந்தான்?, என்னும் வாக்கியங்களில் இராமனா, வேலனோ என்பவற்றிலுள்ள ஆ, ஓ என்பவைகளும் வினப்பொருளில் வந்துள்ளன. இவ்வாறு, எ, யா, ஆ, ஓ, ஏ, என்னும் இவ்வைந்து எழுத்துக்களும் வினப்பொருளில் வரும்போது வினவெழுத்துக்களாம்.

குறிப்பு :—வினப்பொருளில் வாராவிட்டால், இவை வினவெழுத்துக்கள் ஆகா.

(உ - ம்.) எட்டு, யானே, இரா, இதோ, ஏர், மகனே.

எந்த என்பது எ என்பதன் விகாரமேயாம்.

பயிற்சி:

சுட்டெழுத்துக்கள் எவை? உ என்னும் சுட்டெழுத்து எவ்வெவ்விடத்திலுள்ள பொருள்களைச் சுட்டிக் காட்டும்? பின் வரும் வாக்கியங்களிலுள்ள சுட்டெழுத்துக்களைக் கூறுக :—1. இவர்களுள் நல்லவன் இவன். 2. இச்செயல் செய்தவன் அவன். வினவெழுத்துக்கள் எவை? பின் வரும் வாக்கியங்களிலுள்ள வினவெழுத்துக்களைக் கூறுக :—1. நீ எங்கிருந்து வருகிறாய்? 2. நீயோ இதைச் செய்தாய்? 3. இங்கு வந்தவர் யார்?

சுட்டெழுத்துக்கள், வினவெழுத்துக்கள் இவற்றின் திரிபுகள் எவை?

## சில எழுத்துக்கள் மொழியிடைப் பயின்று வரும் விதம்

### ஙகர ஞகரங்கள்

20. மொழியிடைப் பயின்று வருங்கால் ஙகரம் ககரமெய்க்கு முன்னும், ஞகரம் சகரமெய்க்கு முன்னும் பயின்று

வரும். இவ்வாறு பயின்று வருவதால், இவை ஒன்றுக்கொன்று இனமாம்.

(உ - ம்.) தங்கம், பொங்து, அங்து, இஞ்சி, மஞ்சள், குஞ்சு.

குறிப்பு:—ஙகாரத்தை உச்சரிக்கும்போது நாவின் அடிப்பாகம் மேல் வாயின் அடிப்பாகத்தைப் பொருந்தும்படியாகச் செய்து உச்சரிக்க வேண்டும். ஞகாரத்தை உச்சரிக்கும்போது நாவின் இடைப்பாகத்தை மேல் வாயின் இடைப்பாகத்தோடு பொருந்தும் படியாகச் செய்து உச்சரிக்க வேண்டும்.

### ணகர நகர னகரங்கள்

21. மொழியிடைப் பயின்று வருங்கால் ணகரம் டகர மெய்க்கு முன்னும், நகரம் தகர மெய்க்கு முன்னும், னகரம் றகர மெய்க்கு முன்னும் பயின்று வரும். இவ்வாறு பயின்று வருவதால், இவை ஒன்றுக்கொன்று இனமாம். இதனால் ணகரம் டண்ணகரம் என்றும், நகரம் தந்நகரம் என்றும், னகரம் றன்னகரம் என்றும் வழங்கப் பெறும்.

(உ - ம்.) துண்டம், வண்டல், பண்டம், தந்தம், பந்து, சந்து, குன்று, மன்றம், தென்றல்.

குறிப்பு:—ணகர நகர னகரங்களாகிய இம்மூன்றும் மெல்லின மெய்கள். டண்ணகரம் தந்நகரம் றன்னகரம் என்னும் இப்பெயர்கள் இவற்றின் வேறுபாடுகளை நன்கு அறிவிப்பனவாகும்.

ணகரத்தை உச்சரிக்கும்போது நாவின் கடைப்பாகம் மேல் வாயினது கடைப்பாகத்தைப் பொருந்துமாறு செய்து உச்சரிக்க வேண்டும். நகரத்தை உச்சரிக்கும்போது மேல்வாய்ப் பல்லினது

அடியை நாவின் நுனி பொருந்துமாறு செய்து உச்சரிக்க வேண்டும். னகரத்தை உச்சரிக்கும்போது மேல் வாயை நாவின் நுனி மிகப் பொருந்துமாறு செய்து உச்சரிக்க வேண்டும்.

### லகர ழகர ளகரங்கள்

22. லகர ழகர ளகரங்களாகிய இம்மூன்று எழுத்துக்களும் மொழியிடைப் பயின்று வருமாறு அறியாது பிழைபட உபயோகிப்பதால், சொற்களின் பொருள் வேறுபடும்.

(உ - ம்.) மலை—மழை; பலம்—பழம்.

கிழவி—கிளவி; குழவி—குளவி.

வலை—வளை; கலம்—களம்; வெல்லம்—வெள்ளம்.

அலை—அழை—அளை; கலை—களை—கழை.

குறிப்பு :—லகரத்தை உச்சரிக்கும்போது மேல் வாய்ப் பல்லின் அடியை நாவோரமானது தடித்துப் பொருந்துமாறு செய்து உச்சரிக்க வேண்டும். ழகரத்தை உச்சரிக்கும்போது மேல் வாயை நாவின் நுனி தடவுமாறு செய்து உச்சரிக்க வேண்டும். ளகரத்தை உச்சரிக்கும்போது மேல் வாயை நாவின் ஓரமானது தடித்துத் தடவுமாறு செய்து உச்சரிக்க வேண்டும்.

### ரகர றகரங்கள்

23. ரகரம் இடையினத்தைச் சேர்ந்தது ஆதலால், இடையின ரகரம் எனப்படும். றகரம் வல்லினத்தைச் சேர்ந்ததாதலால், வல்லின றகரம் எனப்படும். இவை மொழியிடைப் பயின்று வருமாறு அறியாது பிழைபட உச்சரித்தலால் பொருள் வேறுபடும்.

(உ - ம்.) மரம்—மறம்; அருகு—அறுகு; கரி—கறி; பரவை—பறவை.

குறிப்பு :—ரகரத்தை உச்சரிக்கும்போது மேல்வாயை நாவின் நுனி தடவுமாறு செய்து உச்சரிக்க வேண்டும். றகரத்தை உச்சரிக்கும்போது மேல் வாயை நாவின் நுனி நன்ருகப் பொருந்துமாறு செய்து உச்சரிக்க வேண்டும்.

பயிற்சி :

பின் வரும் வாக்கியங்களில் காணப்படும் எழுத்துப் பிழைகளைத் திருத்தி அமைக்க :—

1. (i) பங்ச காலத்தில் மக்கள் மிகவும் கஷ்டப்படுவர்.
   (ii) காக்கைக்குத் தன் குங்சு பொன் குங்சு
   (iii) கடல் சில சமயஞ்களில் பொஞ்குகிறது.
2. (i) கன்டது கற்கப் பன்டிதன் ஆவான்.
   (ii) இன்று நாங்கள் வன்தோம்.
   (iii) பெண் யானைக்குத் தண்தம் இல்லை.
3. (i) காழை மாடு வயளில் உளுதது.
   (ii) நல்லவர்கலை நாழ்தோறும் வணஙகு.
   (iii) வாளை மரத்திற் பளம் பளுத்திருக்கிறது.
4. (i) மறத்தின்மேல் எரினல் குறங்கு கடிக்கும்.
   (ii) விறைவில் பால் கரந்து வறுக.
   (iii) நான் கூரியது உன் காதில் எரவில்லையா ?

## வடவெழுத்துக்கள்

24. வடவெழுத்துக்களாவன, வடமொழி அல்லது ஸம்ஸ்கிருத பாஷைக்குரிய எழுத்துக்களாம்.

வடவெழுத்துக்களில் ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ என்னும் ஐந்து எழுத்துக்களும் தமிழில் மிகுதியாக வந்து வழங்குகின்றன.

(உ - ம்.) ரோஜா, கூஜா; விஷம், புஷ்பம்; வஸ்திரம், புஸ்தகம்; ஹாரம், ஹேமம்; பக்ஷி, பரீக்ஷை.

குறிப்பு:—ஸ்ரீ என்னும் வடவெழுத்தும் சிறுபான்மை தமிழில் வந்து வழங்குகின்றது.

(உ - ம்.) ஸ்ரீராமன்.

## சொல்

25. எழுத்துத் தனித்தாவது, தொடர்ந்தாவது நின்று பொருளை உணர்த்துமானால், சொல்லாம். சொல், பதம், மொழி, வார்த்தை, கிளவி என்பன ஒரு பொருட் சொற்கள்.

(உ - ம்) ஆ, மா, பூ.

எழுத்துத் தனித்து நின்று பொருளை உணர்த்திச் சொல்லாயிற்று. இவ்வாறு வருவன ஓரெழுத்தொருமொழி எனப்படும்.

(உ - ம்.) பலா, அரசு, மருந்து, முழக்கம்.

எழுத்துக்கள் பல தொடர்ந்து நின்று பொருளை உணர்த்திச் சொல்லாயின. இவ்வாறு வருவன எழுத்துத் தொடர்மொழி, அல்லது பலவெழுத்து மொழி எனப்படும்.

26. தமிழ் மொழியில் உள்ள சொற்கள் நான்கு வகைப்படும். அவையாவன, பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பனவாம்.

## பெயர்ச்சொல்

27. இராமன் கடைக்குப் போய்ப் புத்தகம் வாங்கினான். இவ்வாக்கியத்தில் 'இராமன்' என்பது ஒரு மனிதனுடைய பெயரையும், 'கடை' என்பது ஓர் இடத்தினுடைய பெயரையும், 'புத்தகம்' என்பது ஒரு பொருளினுடைய பெயரையும் குறிக்கின்றன.

28. ஏதாவது ஒன்றின் பெயரைக் குறிக்கும் சொல் பெயர்ச்சொல்லாம்.

பெயர்ச்சொற்கள் ஆறு வகைப்படும். அவையாவன: பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், பண்புப்பெயர், தொழிற்பெயர் என்பனவாம்.

29. பொருட்பெயர்:—ஏதாவது ஒரு பொருளைக் குறிக்கும் பெயர் பொருட்பெயராம்.

(உ - ம்.) இராமன், சீதை, பசு, காக்கை, மரம், புல்.

30. இடப்பெயர்:—ஏதாவது ஓர் இடத்தைக் குறிக்கும் பெயர் இடப்பெயராம்.

(உ - ம்.) வீடு, தோட்டம், காடு, சென்னை, இந்தியா.

31. காலப்பெயர்:—காலத்தைக் குறிக்கும் பெயர் காலப்பெயராம்.

(உ - ம்.) விநாடி, நிமிஷம், மணி, செவ்வாய், ஆனி, ஆங்கீரஸ, கார்த்திகை.

32. சினைப்பெயர்:—பொருளினது உறுப்பைக் குறித்து வரும் பெயர் சினைப்பெயராம்.

(உ - ம்.) கண், கால், கிளை.

33. பண்புப்பெயர்:—பொருளின் பண்பைக் குறிக்கும் பெயர் பண்புப்பெயராம். இது குணப்பெயர் என்றும் கூறப்படும். [பண்பு=குணம்.]

(உ - ம்.) நன்மை, தீமை, கருமை, செம்மை, தண்மை, வெம்மை, புதுமை, பழமை.

34. தொழிற்பெயர் :—ஏதாவது ஒரு தொழிலைக் குறிக்கும் பெயர் தொழிற்பெயராம்.

(உ-ம்.) போதல், வருதல், நடக்கை, மறதி, செலவு, ஆட்டம், ஓட்டம்.

பயிற்சி :

சொல்லாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? பெயர்ச் சொல்லாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? ஒவ்வொரு வகைக்கும் மும்மூன்று உதாரணங்கள் எழுதுக.

பின் வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச்சொற்களை எடுத்தெழுதி, அவை இன்ன வகையைச் சேர்ந்தவை என்று குறிக்க :— 1. கந்தன் பந்து ஆடினான். 2. விரலில் மோதிரம் உள்ளது. 3. எருமை கருமை நிறமானது. 4. முருகன் வயலுக்குச் சென்றான். 5. நாங்கள் உனது வருகையை எதிர்பார்த்தோம்.

35. பெயர்ச் சொல்லில் திணை, பால், எண், இடம், வேற்றுமை ஆகியவற்றை அறிதல் வேண்டும்.

திணை

36. உலகத்திலுள்ள பொருள்கள் எல்லாம் தமிழ் இலக்கணத்தில் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன : உயர்திணை அஃறிணை என்பனவாம்.

37. உயர்திணையாவது, உயர்ந்த வகுப்பு. அஃறிணையாவது, உயர்ந்தது அல்லாத அதாவது தாழ்ந்த வகுப்பு. [அல் + திணை = அஃறிணை.]

38. உயர்திணை :—மக்களும், தேவரும், நரகரும் உயர்திணையாம்.

(உ - ம்.) அரசன், அரசி, இந்திரன், சிவன், நரகர்.

குறிப்பு :—மக்கள் - பூலோக வாசிகள்; தேவர் - மேல் உலக வாசிகள்; நரகர் - கீழ் உலக வாசிகள்.

அஃறிணை :—மனிதரல்லாத உயிருள்ள பிராணிகளும் உயிரில்லாப் பொருள்களும் அஃறிணையாம்.

(உ - ம்.) பசு, காக்கை, மரம், கல்.

குறிப்பு :—கடவுளை உயர்திணையாகவும் அஃறிணையாகவும் கூறுவர்.

(உ - ம்.) கடவுள் எங்கும் நிறைந்து இருக்கிறார். தெய்வம் காக்கும்.

## பால்

39. பாலாவது, திணையினது உட்பிரிவாம். பால் ஐந்து வகைப்படும். அவையாவன: ஆண் பால், பெண் பால், பலர் பால், ஒன்றன் பால், பலவின் பால் என்பனவாம்.

40. ஆண் பால் :—ஆண்களில் ஒருவனைக் குறிப்பது ஆண் பாலாம்.

(உ - ம.) வேலன், கண்ணன், சங்கரன்.

41. பெண் பால் :—பெண்களில் ஒருத்தியைக் குறிப்பது பெண் பாலாம்.

(உ - ம்.) சீதை, தமயந்தி, திரௌபதி.

42. பலர் பால் :—பல ஆண்களையாயினும், பல பெண்களையாயினும், அவ்விருவர்களையாயினும் குறிப்பது பலர் பாலாம்.

(உ - ம்.) ஆடவர், பெண்கள், மக்கள்.

43. ஒன்றன் பால் :—அஃறிணைப் பொருளில் ஒன்றைக் குறிப்பது ஒன்றன் பாலாம்.

(உ-ம்.) யானை, புறா, செடி, கல்.

44. பலவின் பால் :—அஃறிணைப் பொருளில் பலவற்றைக் குறிப்பது பலவின் பாலாம்.

(உ-ம்.) யானைகள், புறாக்கள், செடிகள், கற்கள்.

45. ஐந்து பால்களுள் ஆண் பால், பெண் பால், பலர் பால் ஆகிய மூன்றும் உயர்திணைக்குரியவை. ஒன்றன் பால், பலவின் பால் ஆகிய இரண்டும் அஃறிணைக்குரியவை.

குறிப்பு :—அஃறிணைப் பொருள்கள் எல்லாவற்றிலும் ஆண், பெண் என்னும் பிரிவு இல்லாதபடியால் அத்திணையில் ஆண் பெண் என்னும் பாகுபாடு அமைக்கப்படவில்லை.

பயிற்சி :

திணையாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? உதாரணங்கள் எழுதுக. பாலாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? உதாரணங்கள் எழுதுக. உயர்திணைக்குரிய பால்கள் எவை? அஃறிணைக்குரிய பால்கள் எவை? பின் வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச்சொற்கள் இன்ன திணை, இன்ன பாலைச் சேர்ந்தவை எனக் குறிக்க:—1. யுத்தத்தில் பல வீரர்கள் மடிந்தார்கள். 2. நளனுக்கும் தமயந்திக்கும் மணம் நடந்தது. 3. எருதுகள் ஏர் உழ உதவும். 4. வயலில் நெற்பயிர் விளைந்திருக்கிறது. 5. எலிக்குப் பகை பூனை.

## எண்

46. எண் என்பது, பொருள்களின் எண்ணிக்கையைக் குறிப்பதாம். அஃது ஒருமை, பன்மை என இரு வகைப்படும்.

47. ஒருமை :—ஒரு பொருளைக் குறிப்பது ஒருமை ஆகும்.

(உ - ம்.) மனிதன், நாய், மரம், கல்.

48. பன்மை :—பல பொருள்களைக் குறிப்பது பன்மை ஆகும்.

(உ - ம்.) மனிதர், நாய்கள், மரங்கள், கற்கள்.

குறிப்பு :—ஒன்றிற்கு மேற்பட்டதெல்லாம் பன்மையாம். ஐந்து பால்களுள் ஆண் பால், பெண் பால், ஒன்றன் பால் இம்மூன்றும் ஒருமை எண்ணுக்குரியன. பலர் பால், பலவின் பால் ஆகிய இரண்டும் பன்மை எண்ணுக்குரியன.

## இடம்

49. இடமாவது, சொற்கள் வழங்கி வருதற்குரிய இடமாம். அது மூன்று வகைப்படும். அவையாவன, தன்மை, முன்னிலை, படர்க்கை என்பனவாம்.

50. நானும் நீயும் கந்தனைக் கண்டு வருவோம். இவ்வாக்கியத்தில் ஒருவன் மற்றொருவனோடு வேறொருவனைக் குறித்து ஏதோ பேசுகிறான். அதில் நான் என்பது பேசுவோனைக் குறிக்க வந்தது. நீ என்பது பேசுவதைக் கேட்டுக்கொண்டு முன் நிற்பவனைக் குறிக்க வந்தது. கந்தன் என்பது இவ்விருவருமல்லாத வேறொருவனைக் குறிக்க வந்தது.

பேசுவோனைக் குறிக்கும் இடம் தன்மை இடமாம். பேசுவதைக் கேட்டுக்கொண்டு முன்னிற்போனைக் குறிக்கும் இடம் முன்னிலை இடமாம். தன்மை, முன்னிலை ஆகிய இரண்டுமல்லாத இடம் படர்க்கை இடமாம்.

51. இவற்றுள் தன்மை, முன்னிலை இரண்டிலும் திணை, பால்கள் தோன்றா; எண் மட்டும் தோன்றும்.

படர்க்கையில் திணை, பால், எண் ஆகிய எல்லாம் தோன்றும்.

(உ - ம்.) . ஒருமை — பன்மை

தன்மை—யான், நான் —யாம், நாம், யாங்கள், நாங்கள்.

முன்னிலை—நீ —நீர், நீங்கள், நீயிர், நீவிர்.

தன்மை முன்னிலைகளில் எண் மட்டும் தோன்றிற்று.

படர்க்கை

உயர்திணை

அவன், மனிதன், இராமன்—ஆண் பால் } ஒருமை
அவள், பெண், சீதை —பெண் பால் } ஒருமை

அவர், அவர்கள் } பலர் பால்—பன்மை
மனிதர், பெண்கள், மக்கள் } பலர் பால்—பன்மை

அஃறிணை

அது, குதிரை, மரம்—ஒன்றன் பால்—ஒருமை
அவை, குதிரைகள், மரங்கள்—பலவின் பால்—பன்மை

படர்க்கையில் திணை, பால், எண் ஆகிய எல்லாம் தோன்றின.

பயிற்சி :

எண்ணாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? உதாரணம் தருக. ஒருமை எண்ணுக்குரிய பால்கள் எவை? பன்மை எண்ணுக்குரிய பால்கள் எவை? இடமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? தன்மையாவது யாது? முன்னிலையாவது யாது? படர்க்கையாவது யாது? பின் வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச்சொற்களுக்குரியவை இன்ன எண், இன்ன இடம் என்பதைக் குறிக்க :—1. நீ எங்குச் சென்றிருந்தாய்? 2. நான் இன்று பாடசாலைக்குச் செல்லவில்லை. 3. அவன் மாலையில் அங்கு வருவான். 4. மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.

## வேற்றுமை

52. பெயரின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமையாம். பெயர்ச்சொற்களின் ஈற்றில் சில சொற்கள்

சேர்ந்து நின்று, அவற்றின் பொருளை அங்ஙனம் வேறு படுத்தும். அச்சொற்களுக்கு வேற்றுமை உருபுகள் என்பது பெயர்.

வேலன் கண்டான்—வேலனைக் கண்டான்.

வேலன் வந்தான்—வேலனோடு வந்தான்.

வேலன் கொடுத்தான்—வேலனுக்குக் கொடுத்தான்.

வேலன் நல்லவன்—வேலனின் நல்லவன்.

வேலன் நிலம் வாங்கினான்—வேலனது நிலம் வாங்கினான்.

வேலன் சென்றான்—வேலன்கண் சென்றான்.

இவ்வாக்கியங்களில் வேலன் என்னும் பெயரினது ஈற்றில் ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் சொற்கள் சேர்ந்து நின்று, பெயரின் பொருளை வேறுபடுத்தியது காண்க.

53. வேற்றுமை எட்டு வகைப்படும். அவையாவன: முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை என்பனவாம்.

54. முதல் வேற்றுமை:—இதற்கு உருபு இல்லை. இவ்வேற்றுமையை ஏற்கும் பெயர் யாதொரு மாறுபாடும் அடையாமல், இயல்பாய் இருக்கும். இதற்கு எழுவாய் வேற்றுமை என்றும் பெயர் உண்டு. [எழுவாய்=முதல்.]

(உ - ம்.) முருகன் சென்றான்; அரசன் வந்தான்.

இவ்வேற்றுமையில் முருகன், அரசன் என்னும் பெயர்கள் முதல் வேற்றுமையை ஏற்று வந்தன.

55. இரண்டாம் வேற்றுமை:—இவ்வேற்றுமைக்கு உருபு ஐ என்பது. இவ்வேற்றுமையை ஏற்கும் பெயர்

செயப்படுபொருளாய் இருக்கும். ஆதலால், இதற்குச் செயப்படுபொருள் வேற்றுமை என்பதும் பெயர்.

(உ-ம்.) முகுந்தன் வீட்டைக் கட்டினன்.
மாடு புல்லைத் தின்றது.

இவ்வாக்கியங்களில் வீட்டை, புல்லை என்பன இரண்டாம் வேற்றுமை உருபேற்றுச் செயப்படுபொருளில் வந்தன.

56. மூன்றும் வேற்றுமை:—இவ்வேற்றுமையின் உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு என்பனவாம்.

(உ-ம்.) தச்சனல் மேஜை செய்யப்பட்டது.
எழுத்தாணியால் அவன் எழுதினன்.
அரசனல் ஆலயம் கட்டப்பட்டது.
வாளான் மரத்தை அறுத்தான்.
தந்தையோடு மகன் வந்தான்.
இராமனேடு சீதை கானகம் சென்ருள்.

இவ்வாக்கியங்களில், தச்சனல், எழுத்தாணியால், அரசனல், வாளான், தந்தையொடு, இராமனேடு என்பன மூன்றும் வேற்றுமை உருபேற்று வந்தன.

57. நான்காம் வேற்றுமை:—இவ்வேற்றுமைக்கு உருபு கு ஒன்றே.

(உ-ம்.) சீதைக்குக் கணவன் இராமன்.
ஏழைக்குச் சோறு போடு.
எலிக்குப் பகை பூனே.
அறிவுக்குப் படித்தான்.

இவ்வாக்கியங்களில், சீதைக்கு, ஏழைக்கு, எலிக்கு, அறிவுக்கு என்பன நான்காம் வேற்றுமை உருபேற்று வந்தன.

58. ஐந்தாம் வேற்றுமை:—இதன் உருபுகள் இல், இன் என்பன. இவற்றுள் இல் உருபோடு இருந்து,

இருந்தும் என்பனவும், இன் உருபோடு நின்று, நின்றும் என்பனவும் பெரும்பாலும் சேர்ந்து வரும்.

(உ - ம்.) அவனில் இவன் பெரியவன்.
ஊரின் நீங்கினான்.
பையிலிருந்து பணத்தை எடுத்தான்.
பையிலிருந்தும் பணத்தை எடுத்தான்.
மரத்தினின்று இறங்கினான்.
மரத்தினின்றும் இறங்கினான்.

இவ்வாக்கியங்களுள், அவனில், ஊரின் என்பன ஐந்தாம் வேற்றுமை உருபேற்றும், பையிலிருந்து, பையிலிருந்தும், மரத்தினின்று, மரத்தினின்றும் என்பன உருபோடு இருந்து, இருந்தும், நின்று, நின்றும் என்பனவற்றை ஏற்றும் வந்தன.

59. ஆறும் வேற்றுமை:—இதற்கு உருபுகள் அது, ஆது, அ என்பனவாம். இவ்வுருபுகளுள் அது, ஆது என்னும் இரண்டும் வருமொழி ஒருமைக்கும், அ என்பது வருமொழிப் பன்மைக்கும் வரும்.

(உ - ம்.) அவனது புத்தகம் } ஒருமை
தனாது பகைவன் } ஒருமை
தன கைகள்—பன்மை

இவற்றுள் அவனது, தனாது, தன என்பன ஆறும் வேற்றுமை உருபேற்று வந்தன. இவ்வுதாரணங்களுள் அதுவும், ஆதுவும் வருமொழி ஒருமைக்கும், அ என்பது வருமொழிப் பன்மைக்கும் வந்தன காண்க.

60. ஏழாம் வேற்றுமை:—இதன் உருபுகள் கண், இல் என்பனவாம்.

(உ - ம்.) குகைக்கண் தங்கினான்.
வீட்டில் கண்டேன்.

இவற்றுள், குகைக்கண், வீட்டில் என்பன ஏழாம் வேற்றுமை உருபேற்று வந்தன.

61. எட்டாம் வேற்றுமை:—இது விளித்தல் பொருளில் வரும். ஆதலால், இதற்கு விளி வேற்றுமை என்பது பெயர். [விளித்தல்=அழைத்தல்=கூப்பிடுதல்.]

இவ்வேற்றுமைக்கு உருபு இல்லை. இவ்வேற்றுமையை ஏற்கும்போது பெயர்ச்சொற்கள் ஈறு மிகுதல், ஈறு திரிதல், ஈறு கெடுதல், ஈற்றயலெழுத்துத் திரிதல், இயல்பாதல் முதலிய பல விகாரங்களை அடையும்.

(உ - ம்.) தந்தை—தந்தையே!—ஈறு மிகுந்தது.
பிள்ளை—பிள்ளாய்!—ஈறு திரிந்தது.
மன்னன்—மன்ன!—ஈறு கெட்டது.
மக்கள்—மக்காள்!—ஈற்றயலெழுத்துத் திரிந்தது.
தம்பி—தம்பி!—இயல்பாயிற்று.

இவற்றுள் தந்தையே!, பிள்ளாய்!, மன்ன!, மக்காள்!, தம்பி! என்பன எட்டாம் வேற்றுமை ஏற்று வந்தன.

## வினைச்சொல்

62. கந்தன் ஓடுகிறான்; கந்தன் விளையாடுகிறான்; கந்தன் சாப்பிடுகிறான். இவ்வாக்கியங்களில் ஓடுகிறான், விளையாடுகிறான், சாப்பிடுகிறான் என்னும் சொற்கள் கந்தன் செய்யும் தொழில்களைக் குறிக்கின்றன அல்லவா? இவ்விதம் ஒரு பொருளின் தொழிலைக் குறிக்கும் சொல் வினைச்சொல்லாம். [வினை=தொழில்.]

63. வினைச்சொல்லும் பெயர்ச்சொல்லைப் போலவே திணை, பால், எண், இடங்களைக் காட்டும்; ஆனால், வேற்றுமையை ஏற்காது.

(உ - ம்.) சென்றான்.

இவ்வினைச்சொல் உயர்திணை, ஆண் பால், ஒருமை எண், படர்க்கை இடம் இவற்றைக் காட்டியது காண்க.

## காலம்

64. வினைச்சொற்கள் காலங் காட்டும். காலமாவது, தொழில்கள் நடைபெறுவது எப்பொழுது என்பதைத் தெரிவிப்பதாம். அஃது இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என மூன்று வகைப்படும்.

## இறந்த காலம்

65. அண்ணன் வந்தான்; நாய் ஓடிற்று; காற்று வீசினது. இவ்வாக்கியங்களிலுள்ள வந்தான், ஓடிற்று, வீசினது என்னும் வினைச்சொற்களை உற்று நோக்கி, அவை அந்தந்தத் தொழில்கள் முடிந்துவிட்டன என்பதைத் தெரிவிப்பதைக் காண்க. இவ்வாறு தொழில் முடிந்துவிட்டதைத் தெரிவிப்பது இறந்த காலமாம்.

(உ - ம்.) செய்தேன், கண்டாய், கற்றான், போயினர்.

## நிகழ் காலம்

66. உபாத்தியாயர் வருகிறார்; குழந்தை விளையாடுகிறது; குதிரை கனைக்கிறது. இவ்வாக்கியங்களிலுள்ள வருகிறார், விளையாடுகிறது, கனைக்கிறது என்னும் வினைச்சொற்களை உற்று நோக்கி, அந்தத் தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டு முடிவு பெறாமலிருக்கும் நிலையில் இருப்பதைக் காண்க. இவ்வாறு தொழில் ஆரம்பிக்கப்பட்டு முடிவு பெறாமல் இருப்பதைத் தெரிவிப்பது நிகழ் காலமாம்.

(உ - ம்.) படிக்கிறேன், வருகின்றாய், நடவாநின்றான்.

### எதிர் காலம்

67. நண்பன் வருவான்; அவள் போவாள்; குதிரை ஓடும். இவ்வாக்கியங்களிலுள்ள வருவான், போவாள், ஓடும் என்னும் வினைச்சொற்கள் அந்தந்தத் தொழில்கள் இனி ஆரம்பிக்கப்பெறும் என்பதைத் தெரிவிப்பது காண்க. இவ்விதம் தொழில் இனி ஆரம்பிக்கப்படும் என்பதைத் தெரிவிப்பது எதிர் காலமாம்.

(உ - ம்.) நடப்பான், வருவான்.

#### பயிற்சி

வினைச்சொல்லாவது யாது? வினைச்சொல் எவ்வெவற்றைக் காட்டும்? காலமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? இறந்த காலமாவது யாது? நிகழ் காலமாவது யாது? எதிர்காலமாவது யாது?

பின் வரும் வினைச்சொற்கள் இன்ன காலத்தைத் தெரிவிப்பன எனக் கூறுக:—கொடுத்தான், தேடுவாள், விளையாடாநின்றேன், எழுதினன், கொண்டாள், விற்பார், நடக்கின்றான், படிக்கிறார்கள்.

## வினைச்சொல்லின் வகைகள்

68. வினைச்சொல்லைச் செயப்படுபொருள் குன்றா வினை என்றும், செயப்படுபொருள் குன்றிய வினை என்றும் இரு வகையாகப் பிரிக்கலாம்.

### செயப்படுபொருள் குன்றா வினை

69. தச்சன் மேஜை செய்தான். இவ்வாக்கியத்தில் செய்தான் என்னும் வினை, மேஜை என்னும் செயப்படுபொருளை உடையதாய் இருக்கிறது. இவ்வாறு செயப்படுபொருளையுடைய வினை செயப்படுபொருள் குன்றா வினையாம்.

குறிப்பு;—செயப்படுபொருளை அறிய வினைச்சொல்லிற்கு முன் யாரை அல்லது எதை என்பவற்றுள் ஏற்ற ஒன்றை வைத்து வினவ வேண்டும். அவ்வினவிற்கு வரும் விடையே செயப்படு பொருளாய் இருக்கும்.

### செயப்படுபொருள் குன்றிய வினை

**70.** நாய் ஓடிற்று. இதில் ஓடிற்று என்னும் வினை செயப்படுபொருளைப் பெற்றிருக்கவில்லை. இவ்வாறு செயப் படுபொருளைப் பெற்றிராத வினை செயப்படுபொருள் குன்றிய வினையாம்.

குறிப்பு :—ஒரு வினைச்சொல்லிற்கு முன் யாரை அல்லது எதை என்பவற்றுள் ஏற்ற ஒன்றை வைத்து வினவ, விடை வாரா விட்டால், அது செயப்படுபொருள் குன்றிய வினையாகும்.

**71.** மற்றொரு வகையாகப் பிரித்தால், வினைச்சொற் களை வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### வினை முற்று

**72.** இராமன் சென்றான்; மரம் விழுந்தது. இவற்றி லுள்ள சென்றான், விழுந்தது என்னும் வினைச்சொற்களைக் கவனித்து, அவை பொருள் முற்றுப் பெற்று நிற்பதை அறிக. இவ்வாறு பொருள் முற்றுப்பெற்று நிற்கும் வினைச் சொல் வினை முற்று ஆகும்.

வினை முற்று, இறந்த கால வினை முற்று என்றும், நிகழ் கால வினை முற்று என்றும், எதிர் கால வினை முற்று என்றும் மூவகைப்படும்.

இறந்த கால வினை முற்று :—இறந்த காலத்தில் வரும் வினை முற்று இறந்த கால வினை முற்றாம்.

(உ - ம்.) இறந்த காலம்

| | |
|---|---|
| செய்தேன். | (தன்மை ஒருமை) |
| வந்தோம். | ( ,, பன்மை) |
| உண்டாய். | (முன்னிலை ஒருமை) |
| கண்டீர். | ( ,, பன்மை) |
| தின்றான். | (படர்க்கை ஆண் பால்) |
| கற்றாள். | ( ,, பெண் பால்) |
| பாடினார். | ( ,, பலர் பால்) |
| போனது. | ( ,, ஒன்றன் பால்) |
| சென்றன. | ( ,, பலவின் பால்) |

நிகழ் கால வினை முற்று :—நிகழ் காலத்தில் வரும் வினை முற்று நிகழ் கால வினை முற்றாம்.

(உ - ம்.) நிகழ் காலம்

| | |
|---|---|
| பிடிக்கிறேன். | (தன்மை ஒருமை) |
| தொடுகிறோம். | ( ,, பன்மை) |
| படிக்கிறாய். | (முன்னிலை ஒருமை) |
| இருக்கின்றீர். | ( ,, பன்மை) |
| விடுகின்றான். | (படர்க்கை ஆண் பால்) |
| செல்கின்றாள். | ( ,, பெண் பால்) |
| உண்ணாநின்றார். | ( ,, பலர் பால்) |
| நடவாநின்றது. | ( ,, ஒன்றன் பால்) |
| தூங்காநின்றன. | ( ,, பலவின் பால்) |

எதிர் கால வினை முற்று :—எதிர் காலத்தில் வரும் வினை முற்று எதிர் கால வினை முற்றாம்.

(உ - ம்.) எதிர் காலம்

| | |
|---|---|
| படிப்பேன். | (தன்மை ஒருமை) |
| நடப்போம். | ( ,, பன்மை) |
| பிடிப்பாய். | (முன்னிலை ஒருமை) |
| உண்பீர். | ( ,, பன்மை) |

| | |
|---|---|
| கொடுப்பான். | (படர்க்கை ஆண் பால்) |
| போவாள். | ( ,, பெண் பால்) |
| தேடுவார். | ( ,, பலர் பால்) |
| (அது) தரும். | ( ,, ஒன்றன் பால்) |
| (அவை) வரும். | ( ,, பலவின் பால்) |

### பெயரெச்சம்

73. செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் இவ்வினைச் சொற்கள் பொருள் முற்றுப்பெறாது நிற்பதைக் கவனிக்க. செய்த பையன், செய்கின்ற மனிதன், செய்யும் வேலை என எதாவது ஒரு பெயர்ச்சொல்லை இவற்றோடு சேர்த்தால், பொருள் முற்றுப்பெறுகிறது அல்லவா? இங்ஙனம் பெயர்ச்சொல்லைக்கொண்டு பொருள் முடிவு பெற நிற்கும் வினைச்சொல் பெயரெச்சம் ஆகும்.

குறிப்பு:—பெயரெச்சம்=பெயராகிய எச்சத்தை உடைய வினைச்சொல். எச்சம்=எஞ்ச நிற்பது; அதாவது பொருள் முற்றுப் பெறுவதற்காகப் பெயரை எதிர் பார்த்து நிற்பது.

(உ - ம்.) பெயரெச்சம்

| | | |
|---|---|---|
| வந்த, | வருகிற, | வரும் |
| சென்ற, | செல்கிற, | செல்லும் |
| உண்ட, | உண்கிற, | உண்ணும் |
| படுத்த, | படுக்கிற, | படுக்கும் |
| ஓடின, | ஓடுகிற, | ஓடும் |

### வினையெச்சம்

74. வந்து, உண்ண, கண்டால், பார்ப்பதற்கு என்னும் இவ்வினைச்சொற்களும் பொருள் முற்றுப்பெறாது நிற்பதைக் கவனிக்க. வந்து சேர்ந்தான்; உண்ண வந்தான்; கண்டால் சொல்வேன்; பார்ப்பதற்குச் சென்றான் என இவற்றோடு

ஏதாவது ஒரு வினைச்சொல்லைச் சேர்த்தால், பொருள் முற்றுப்பெறுகிறது. இவ்வாறு வினைச்சொல்லைக்கொண்டு பொருள் முடிவுபெற நிற்கும் வினைச்சொல் வினையெச்சம் ஆகும்.

குறிப்பு :—வினையெச்சம்=வினையாகிய எச்சத்தை உடைய வினைச்சொல்.

(உ-ம்.) வினையெச்சம்

நின்று, நிற்க, நின்றால், நிற்பதற்கு
ஓடி, ஓட, ஓடினால், ஓடுவதற்கு
போய், போக, போனால், போவதற்கு
சென்று, செல்ல, சென்றால், செல்லுவதற்கு
படித்து, படிக்க, படித்தால், படிப்பதற்கு

பயிற்சி:

செயப்படுபொருள் குன்றிய வினை, செயப்படுபொருள் குன்றா வினை, வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஐந்தைந்து உதாரணங்கள் தருக.

பின் வரும் வினைச்சொற்களில் செயப்படுபொருள் குன்றா வினை, செயப்படுபொருள் குன்றிய வினை இவற்றை வேறு வேறாக எடுத்து எழுதுக :—

செய்தான், சென்றான், கற்றான், விற்றான், அடித்தான், பிடித்தான், வந்தான், தந்தான், தூங்கினான், வாங்கினான், நடந்தான், கடந்தான், திரிந்தான், எறிந்தான், பார்த்தான், சேர்த்தான்.

பின் வரும் வாக்கியங்களிலுள்ள வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் இவற்றை வேறு வேறாக எடுத்து எழுதுக :—

(1) காற்று எங்கும் பரவி இருக்கிறது. (2) நீர் உண்ட மேகம் கருமையாய் இருக்கும். (3) கர்வம் உள்ள மனிதர் கெடுவர். (4) கடவுள் இல்லாத இடமே இல்லை. (5) அனுமார் சீதையைத் தேடச் சென்றார்.

## இடைச்சொல்

75. இடைச்சொல்லாவது, பெயர் வினைச்சொற்களைப் போலத் தனித்து வழங்காமல், அவற்றை இடமாகக் கொண்டு வரும் சொல்லாம். வேற்றுமை உருபுகளும், இடைநிலை, விகுதி முதலியவைகளும், சுட்டுச்சொற்களும் வினாச்சொற்களும் இடைச்சொற்களாம்.

76. வேற்றுமை உருபுகளாவன, ஐ, ஆல், ஆன், ஒடு, ஓடு, உடன், கு, இன், நின்று, இருந்து, அது, கண் முதலியன.

77. இடைநிலைகளாவன, த், ட், ற், இன், கின்று, கிறு, ஆநின்று, ப், வ் முதலியன.

78. விகுதிகளாவன, அன், ஆன், அள், ஆள், அர், ஆர், து, வை, அ, கள் முதலியன.

79. சுட்டுச்சொற்களாவன, அ, இ, உ என்பன.

80. வினாச்சொற்களாவன, ஆ, எ, ஏ, ஓ, யா என்பன.

## உரிச்சொல்

81. உரிச்சொல்லாவது, பெயர் வினைகளின் பண்பை உணர்த்தும் சொல்லாம். இதுவும் இடைச்சொல்லைப் போலவே தனித்து வழங்காமல், பெயர் வினைச்சொற்களை அடுத்து வரும். [பண்பு = குணம்.]

(உ-ம்.) சாலப் படித்தான், தவப் பெரியன், உறு புகழ், கடி நகர்.

இவற்றுள் சால, தவ, உறு, கடி என்பன உரிச்சொற்கள்.

### பயிற்சி :

இடைச்சொல்லாவது யாது? எவையெவை இடைச்சொற்கள்? பின் வரும் வாக்கியங்களினின்று இடைச்சொற்களை எடுத்து எழுதுக :—உனக்கு எந்தப் புத்தகம் வேண்டும்? வேலனே இதனைச் செய்தான். நீ எங்கிருந்து வருகிறாய்?

உரிச்சொல்லாவது யாது? சில உரிச்சொற்களைக் குறிப்பிடுக. பின் வரும் வாக்கியங்களிலுள்ள உரிச்சொற்களை எடுத்தெழுதுக:—இதனினும் அது சாலச் சிறந்தது. வேந்தன் கடிநகர் புகுந்தான். அவர் கையிற்கொண்ட பொருள் தவச்சிறிது.

## சொற்றொடர்

82. ஆசிரியர் பாடம் கற்பித்தார்; மாணவன் பாடம் படித்தான். இங்குச் சில சொற்கள் தொடர்ந்து வந்திருத்தல் காண்க. இவ்வாறு சொற்கள் தொடர்ந்து வருவது சொற்றொடர் எனப்படும்.

சொற்றொடர், எச்சச்சொற்றொடர், முற்றுச்சொற்றொடர் என இரு வகைப்படும்.

### எச்சச்சொற்றொடர்

83. வேலன் கடைக்குச் சென்று, கந்தன் கோவிந்தனைக் கண்டு என்னும் சொற்றொடர்கள் பொருள் முடிவு பெறாது இருப்பதைக் காண்க. பொருள் முடிவு பெற வேண்டுமானால், இவற்றோடு வேறு சில சொற்களைச் சேர்த்தல் வேண்டும். இவ்வாறு பொருள் முடிவு பெறாது உள்ள சொற்றொடர் எச்சச்சொற்றொடர் எனப்படும்.

### முற்றுச்சொற்றொடர்

84. வேலன் கடைக்குச் சென்று பழங்கள் வாங்கினான்; கந்தன் கோவிந்தனைக் கண்டு பேசினான். இவற்றில் வந்துள்ள சொற்கள் பொருள் முடிவு பெற்று உள்ளதைக் காண்க. இவ்வாறு பொருள் முடிவு பெற்று உள்ள சொற்றொடர் முற்றுச்சொற்றொடர் எனப்படும். முற்றுச் சொற்றொடர் வாக்கியம் எனவும் கூறப்படும்.

85. ஒரு வாக்கியத்தில் எழுவாய், பயனிலை என்ற இரண்டு முக்கிய உறுப்புக்கள் உண்டு.

### எழுவாய்

86. நண்பன் கண்டான். இவ்வாக்கியத்தைக் கவனித்து இதில் ஒருவர் ஒரு தொழிலைச் செய்ததாகக் கூறப்பட்டிருத்தலைக் காண்க. இவ்வாறு ஒரு வாக்கியத்தில் தொழிலைச் செய்பவனைக் குறிக்கும் சொல் எழுவாய் எனப்படும். எழுவாயே ஒரு வாக்கியத்திற்கு முதன்மையான உறுப்பாம். [எழுவாய் = முதல்.]

குறிப்பு :—எழுவாய் இல்லாவிட்டால், வாக்கியமே இல்லை. அதனாலேதான் அது முதன்மையான உறுப்பு எனப்பட்டது.

உதாரணமாக நண்பன் கண்டான் என்ற வாக்கியத்தில் 'நண்பன்' என்னும் சொல் இல்லாவிட்டால், காணுதல் ஆகிய தொழிலும் இல்லை. ஆகையால், வாக்கியமும் இல்லை.

### பயனிலை

87. வண்ணான் வந்தான். இவ்வாக்கியத்தில் எழுவாய் ஒரு தொழிலைச் செய்வதைக் காண்க. அத்தொழிலைக் குறிக்கும் சொல் அவ்வாக்கியத்தை முடிக்கும் சொல்லாயிருப்பதை அறிக. இவ்வாறு ஒரு வாக்கியத்தில் எழுவாய் செய்யும் தொழிலை உணர்த்துவதாய் அவ்வாக்கியத்தை முடித்து நிற்கும் சொல் பயனிலை எனப்படும்.

குறிப்பு :—பயனிலை இல்லாவிட்டால், ஒரு வாக்கியத்தில் பொருள் முடிவு பெறாது. [பயனிலை = பொருள் முடிந்து நிற்பது.]

88. சில வாக்கியங்களில் செயப்படுபொருள் என்ற வேறோர் உறுப்பும் உண்டு.

## செயப்படுபொருள்

89. குடியானவன் நிலத்தை உழுதான். இவ்வாக்கியத்தில் எழுவாய் செய்யும் தொழிலால் உண்டாகும் பயனை நிலம் என்ற ஒரு பொருள் அடைவது காண்க. இவ்வாறு, ஒரு வாக்கியத்தில் எழுவாய் செய்யும் தொழிலின் பயனை அடையும் பொருள் செயப்படுபொருளாம்.

குறிப்பு :—செயப்படுபொருள் பெரும்பாலும் இரண்டாம் வேற்றுமையைக் கொண்டிருக்கும்.

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் இவற்றைக் கண்டுபிடிக்கும் விதம் :—முதலில் பயனிலையைக் கண்டு பிடிக்க வேண்டும். அப்பால் அப்பயனிலைக்கு முன் யார் அல்லது எது என்பவற்றில் ஏற்ற ஒன்றை வைத்து வினவ வரும் விடை, எழுவாய் ஆகும். அப்பயனிலைக்கு முன் யாரை அல்லது எதை என்றவற்றுள் ஏற்ற ஒன்றை வைத்து வினவ வரும் விடை செயப்படுபொருள் ஆகும்.

உதாரணமாகச் 'சேணியன் துணியை நெய்தான்,' என்ற வாக்கியத்தில் நெய்தான் என்பது அவ்வாக்கியத்தை முடிக்கும் சொல்; ஆதலால், அது பயனிலை. அப்பயனிலைக்கு முன் 'யார்' என்பதை வைத்து 'யார் நெய்தான்?' என வினவ வரும் விடை சேணியன்; ஆதலால், அஃது எழுவாய். அப்பயனிலைக்கு முன் 'எதை' என்பதை வைத்து 'எதை நெய்தான்?' என வினவ வரும் விடை துணியை என்பது; அதனால், அது செயப்படுபொருள்.

### பயிற்சி :

சொற்றொடராவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? வாக்கியமாவது யாது? வாக்கியத்தில் முக்கியமான பிரிவுகள் எவை? எழுவாயாவது யாது? பயனிலையாவது யாது? செயப்

படுபொருளாவது யாது? எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் இவற்றைக் கண்டுபிடிக்கும் விதம் யாது?

பின் வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் இவற்றைக் கண்டுபிடிக்க :—

(1) அண்ணன் வந்தான். (2) நாய் ஓடிற்று. (3) தம்பி பள்ளிக்கூடம் சென்றான். (4) குதிரை விரைவாய் ஓடிற்று. (5) மரம் ஒடிந்து விழுந்தது. (6) முருகன் பாடத்தைப் படித்தான். (7) கமலம் பழம் தின்றாள். (8) குயவன் பானை வனைந்தான். (9) வண்ணான் ஆற்றில் துணிகளை வெளுத்தான். (10) தையற்காரன் நல்ல நல்ல சட்டைகளைத் தைத்தான்.

பின் வரும் வாக்கியங்களில் கோடிட்ட இடங்களில் ஏற்ற எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை அமைக்க :—

(1)——சென்றார்கள். (2) உழவன் வயலை——(3) தச்சன்——செய்தான். (4) பூனை எலியை——(5) அவன் நேற்று இங்கே——(6) இந்த——அந்தப் பெரிய——இழுத்தது. (7) சிறுவர் வீதியில்——(8) செம்படவன் ஆற்றில்——வீசினான். (9) இராமர் சீதையை——(10) இராமர்——கொன்றார்.

## நிறுத்தக்குறிகள்

90. நாம் வாசிக்கும்போது வாக்கியங்களின் பொருள் நன்கு விளங்கும் பொருட்டுப் பொருத்தமான இடங்களில் நிறுத்திப் படிக்க வேண்டும். அவ்விதம் நிறுத்த வேண்டிய இடங்களை உணர்த்தும்பொருட்டுச் சிற்சில குறிகளை இந்நாளிற் கையாண்டு வருகிறார்கள். அவற்றிற்கு நிறுத்தக் குறிகள் என்பது பெயர்.

(1) , காற்புள்ளி (Comma)—இங்கு ஒரு மாத்திரைக் காலம் நிறுத்த வேண்டும்.

(2) ; அரைப்புள்ளி (Semi-Colon)—இங்கு இரண்டு மாத்திரைக் காலம் நிறுத்த வேண்டும்.

(3) : முக்காற்புள்ளி (Colon)—இங்கு மூன்று மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

(4) • . முற்றுப்புள்ளி (Full Stop)—இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

(5) ? வினாக்குறி (Mark of Interrogation)—இது கேள்வியை உணர்த்தும் குறியாம். இங்கு நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

(6) ! வியப்புக்குறி (Mark of Exclamation)—இது விளி, ஆச்சரியம், கோபம் முதலியவற்றைத் தெரிவிக்கும் குறியாம். இங்குச் சந்தர்ப்பம் நோக்கி மூன்று அல்லது நான்கு மாத்திரை நேரம் நிறுத்த வேண்டும்.

(7) “ ” மேற்கோட்குறிகள் (Quotation Marks)—எதையேனும் ஒன்றை ஒருவர் கூற, அக்கூற்றை அவர் கூறியதுபோல மற்றொருவர் கூறவேண்டியிருப்பின், இக்குறிகளை உபயோகிக்க வேண்டும்.

குறிப்பு :—ஒரு மாத்திரை என்பது, ஒரு முறை கண்ணிமைக்கும் நேரமாவது, ஒரு முறை கைந்நொடிக்கும் நேரமாவது ஆகும்.

பயிற்சி :

*பின் காணும் பத்தியில் (Para) தக்க இடங்களில் ஏற்ற நிறுத்தக் குறிகளை அமைக்க :—*

*பிராமணன் மனமிரங்கிப் புலியின் வார்த்தையை நம்பி மெல்லக் கதவைத் திறந்துவிட்டான் உடனே புலி வெளியே வந்து அடா பிராமணா புலி மனிதனைக் கொன்று தின்பது வழக்கம் என் சொல்லை நம்பிக் கூட்டைத் திறந்து என்னை வெளியே விட்டது உன் மூடத்தனம் ஆகையால் இதோ உன்னைக் கொல்லுகிறேன் என்று சொல்லி அவன் மேல் பாயத் தொடங்கிற்று*

## புணரியல்

91. சொற்கள் ஒன்றோடு ஒன்று சேருவது புணர்ச்சி எனப்படும். சொற்கள் அவ்வாறு புணரும்போது முதலில் நிற்கும் மொழிக்கு நிலைமொழி என்பதும், அதனோடு சேர வரும் மொழிக்கு வருமொழி என்பதும் பெயர்.

(உ - ம்.) நான் வந்தேன்.

இதில் நான் நிலைமொழி ; வந்தேன் வருமொழி.

92. புணர்ச்சி, இயல்பு புணர்ச்சி என்றும், விகாரப் புணர்ச்சி என்றும் இரு வகைப்படும்.

### இயல்பு புணர்ச்சி

93. இயல்பு புணர்ச்சியாவது, சொற்கள் புணரும் போது யாதொரு விகாரமும் அடையாமல் புணரும் புணர்ச்சி யாம்.

(உ - ம்.) மழை + நீர் = மழைநீர்
பொன் + மலை = பொன்மலை

### விகாரப் புணர்ச்சி

94. விகாரப் புணர்ச்சியாவது, சொற்கள் புணரும் போது பல வித மாறுபாடுகளோடு புணரும் புணர்ச்சியாம்.

(உ - ம்.) வாழை + பழம் = வாழைப்பழம்
மண் + குடம் = மட்குடம்
மரம் + வேர் = மரவேர்

95. புணர்ச்சியை, உயிர்முன் உயிர் புணர்தல், உயிர்முன் மெய் புணர்தல், மெய்ம்முன் உயிர் புணர்தல், மெய்ம்முன் மெய் புணர்தல் என நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

## உயிர் முன் உயிர் புணர்தல்

[உயிர் முன் உயிர் புணர்தலாவது, நிலைமொழி ஈற்றில் உயிர் எழுத்து இருக்க, அதன்முன், அதாவது வருமொழி முதலில், உயிர் எழுத்து வந்து புணர்தல்.]

96. நிலைமொழி ஈற்றில் இ, ஈ, ஐ என்னும் உயிர் எழுத்துக்களில் ஒன்று இருக்க, வருமொழி முதலில் உயிரெழுத்து வந்து புணர்ந்தால், ய் என்னும் மெய்யெழுத்து இடையில் தோன்றும். இஃது உடம்படுமெய் எனப்படும். [உடம்படுமெய்=உடம்படுக்கும் அதாவது ஒன்று சேர்க்கும் மெய்.]

(உ - ம்.) ஆணி + இது = ஆணியிது
தீ + இல்லை = தீயில்லை
இலை + அகலம் = இலையகலம்

97. நிலைமொழி ஈற்றில் அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்னும் உயிர்கள் இருக்க, வருமொழி முதலில் உயிரெழுத்து வந்து புணருமானல், இடையில் வகர உடம்படு மெய் தோன்றும்.

(உ - ம்.) பல + இடம் = பலவிடம்
நிலா + ஆட்டம் = நிலாவாட்டம்
எரு + அது = எருவது
பூ + ஆடை = பூவாடை
நொ + இல்லை = நொவில்லை
கோ + எங்கே = கோவெங்கே
கௌ + அதை = கௌவதை

98. நிலைமொழியின் ஈற்றில் ஏகாரம் இருக்க, வருமொழி முதலில் உயிர் எழுத்துக்கள் வந்து புணருமாயின், இடையில் யகர உடம்படு மெய்யாவது வகர உடம்படுமெய் யாவது தோன்றும்.

(உ - ம்.) தே+ஆரம்=தேவாரம்
அவனே+இருந்தான்=அவனேயிருந்தான்.
சே+அடி= { சேயடி / சேவடி }

## உயிர்முன் மெய் புணர்தல்

உயிர்முன் மெய் புணர்தலாவது, நிலைமொழி ஈற்றில் உயிரெழுத்துக்கள் இருக்க, வருமொழி முதலில் மெய்யெழுத்துக்கள் வந்து புணரும் புணர்ச்சியாம்.

99. நிலைமொழியின் ஈற்றில் உயிரெழுத்துக்கள் இருக்க, வருமொழி முதலில் க, ச, த, ப என்னும் வல்லின மெய்கள் வந்தால், அவ்வல்லினங்கள் பெரும்பாலும் மிகும். [மிகுதலாவது, புதிதாய் ஒரெழுத்துத் தோன்றுதலாம்.]

(உ - ம்.) பலா+காய்=பலாக்காய்
பலா+சுளை=பலாச்சுளை
வாழை+தண்டு=வாழைத்தண்டு
வாழை+பழம்=வாழைப்பழம்

## மெய்யின்முன் உயிர் புணர்தல்

[மெய்யின்முன் உயிர் புணர்தலாவது, நிலைமொழி ஈற்றில் மெய்யெழுத்து இருக்க, வருமொழி முதலில் உயிரெழுத்து வந்து புணருதலாம்.]

100. நிலைமொழி ஈற்றில் மெய்யெழுத்துக்கள் இருக்க, வருமொழி முதலில் உயிரெழுத்துக்கள் வந்து புணருமானால், அந்த உயிரெழுத்து நிலைமொழி ஈற்று மெய் எழுத்தின்மீது ஏறி, உயிர்மெய்யெழுத்தாகிவிடும்.

(உ - ம்.) மான்+இனம்=மானினம்
மரம்+இது=மரமிது.
அவள்+எங்கே=அவளெங்கே?

101. தனிக் குற்றெழுத்தை அடுத்து வந்த நிலை மொழி ஈற்று மெய்யின் முன் வருமொழி முதலில் உயி ரெழுத்து வந்து புணருமானால், நிலைமொழி ஈற்று மெய் இரட்டிக்கும். [இரட்டித்தல்=இரண்டாதல்.]

(உ - ம்.) வில்+உருண்டை=வில்லுருண்டை
மெய்+எழுத்து=மெய்யெழுத்து
மண்+இடம்=மண்ணிடம்

### மெய்யின்முன் மெய் புணர்தல்

[மெய்யின்முன் மெய் புணர்தலாவது, நிலைமொழி ஈற்றில் மெய்யெழுத்து இருக்க, வருமொழி முதலில் மெய்யெழுத்து வந்து புணர்தலாம்.]

### ணகர னகர ஈற்றுப் புணர்ச்சி

102. நிலைமொழி ஈற்றில் ணகர னகரங்கள் இருக்க, வருமொழி முதலில் க, ச, த, ப என்னும் வல்லின மெய்கள் வந்து புணருமாயின், ணகரம் டகரமாகவும், னகரம் றகரமா கவும் திரியும்.

(உ - ம்.) மண்+குடம்=மட்குடம்
மண்+பாண்டம்=மட்பாண்டம்
பொன்+சிலம்பு=பொற்சிலம்பு
பொன்+காப்பு=பொற்காப்பு

### லகர ளகர ஈற்றுப் புணர்ச்சி

103. நிலைமொழி ஈற்றில் லகர ளகரங்கள் இருக்க, வருமொழி முதலில் க, ச, த, ப என்னும் வல்லின மெய்கள் வந்து புணர்ந்தால், லகரம் றகரமாகவும், ளகரம் டகரமாகவும் திரியும்.

(உ - ம்.) சொல்+பொருள்=சொற்பொருள்
நல்+காலம்=நற்காலம்

முள் + செடி = முட்செடி
உள் + புறம் = உட்புறம்

பயிற்சி :

புணர்ச்சியாவது யாது? நிலைமொழியாவது யாது? வருமொழியாவது யாது? இயல்பு புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி இவற்றிற்கு உதாரணங்கள் தருக. உடம்படுமெய் என்பதென்ன? எந்தெந்த இடங்களில் எந்தெந்த உடம்படுமெய் தோன்றும்? நிலைமொழி ஈற்றில் உயிரெழுத்துக்கள் இருக்க, வருமொழி முதலில் வல்லினம் வந்தால், எவ்வாறு புணரும்? நிலைமொழி ஈற்றில் லகரம் இருக்க, வருமொழி முதலில் வல்லினம் வந்தால், எவ்வாறு புணரும்?

கீழ்க்காண்பவைகளைப் புணர்த்திக் காட்டுக :—

மலை + உயர்ந்தது ; அவனே + அழகன் ; வில் + ஒடிந்தது; மண் + சுவர் ; எள் + காய் ; சே + அடி ; சொல் + இனிது; வாழை + தண்டு.

மேழ்க்காண்பவைகளைப் பிரித்துக் காட்டுக :—

புலியோடிற்று; நிலாவெறித்தது; பூவெடுத்தான்; மட்கலயம்; கற்சட்டி ; வாழைப்பழம் ; பல்லுயிர் ; எட்செடி.

## சொல்லிலக்கணம் கூறுதல்

104. ஒரு வாக்கியத்திலுள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் இலக்கணம் கூறுவது, சொல்லிலக்கணம் கூறுதலாம். அவ்வாறு கூறுங்கால், பெயர்ச்சொற்களுக்குத் திணை, பால், எண், இடம், வேற்றுமை, முடிவு என்பனவற்றையும், வினைமுற்றுக்களுக்குத் திணை, பால், எண், இடம், காலம், முடிவு என்பனவற்றையும், எச்சங்களுக்கு இன்ன எச்சமென்பதையும் முடிவையும் கூறுதல் வேண்டும்.

(உ - ம்.) இராமனைக் கண்ட சீதை எழுந்து நின்றாள். இராமனை—பெயர்ச்சொல், உயர்திணை, ஆண் பால், ஒருமை

எண், படர்க்கை இடம், 'கண்ட' என்பதற்குச் செயப்படு பொருளாய், இரண்டாம் வேற்றுமை ஏற்று நின்றது.

கண்ட—இறந்த காலப் பெயரெச்சம், 'சீதை' என்னும் பெயர்ச்சொல்லைத் தழுவிற்று.

சீதை—பெயர்ச்சொல், உயர்திணை, பெண் பால், ஒருமை எண், படர்க்கை இடம், 'நின்றாள்' என்பதற்கு எழுவாயாய் வந்தது.

எழுந்து—இறந்த கால வினையெச்சம், 'நின்றாள்' என்னும் வினை முற்றைத் தழுவியது.

நின்றாள்—வினைச்சொல், உயர்திணை, பெண் பால், ஒருமை, படர்க்கை, இறந்த காலம், வினை முற்று, 'சீதை' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

பயிற்சி :

பின் வரும் வாக்கியங்களில் உள்ள சொற்களுக்குச் சொல் இலக்கணம் கூறுக :—1. இராமன் இராவணனை யுத்தத்தில் வென்றான். 2. முருகன் மிகவும் நல்ல பையன். 3. இந்த மாம்பழம் மிகவும் பழுத்திருக்கின்றது. 4. தருமபுத்திரர் பாண்டவர்களுள் மூத்தவர் ஆவார். 5. கிராம வாசம் உடம்புக்கு மிகவும் சௌக்கியமானது.

# இரண்டாம் பாரம்

## I. எழுத்து

### சுட்டின் வகை

1. சுட்டு, அகச்சுட்டு, புறச்சுட்டு என இரு வகைப்படும்.

2. அகச்சுட்டு :—சுட்டெழுத்துச் சொல்லினின்றும் பிரிக்க முடியாதவாறு அதனுள்ளேயே அமைந்து சுட்டுப் பொருளைத் தருமாயின், அது அகச்சுட்டாம்.

(உ - ம்.) அவன், அவள், அவர், அது, அவை.
இவன், இவள், இவர், இது, இவை.
உவன், உவள், உவர், உது, உவை.

இச்சொற்களுக்குள் சுட்டெழுத்துக்கள் இவற்றினின்றும் பிரிக்க முடியாதவாறு அமைந்து சுட்டுப்பொருளை உணர்த்தியது காண்க.

3. புறச்சுட்டு :—சுட்டெழுத்துச் சொல்லினின்றும் பிரிக்க இயலுமாறு அதற்குப் புறத்தில் நின்று சுட்டுப் பொருளைத் தருமாயின், அது புறச்சுட்டாம்.

(உ - ம்.) அப்புத்தகம், இவ்வரசன், உப்பக்கம்.

இவற்றுள் சுட்டெழுத்துக்கள் சொற்களுக்குப் புறத்தில் நின்று சுட்டுப்பொருளை உணர்த்தியது காண்க.

### வினாவின் வகை

4. வினாவெழுத்துக்களில் எ, யா என்னும் இரண்டும் சொல்லுக்கு முதலில் நின்றே வினாப்பொருளைத் தரும்.

ஆ, ஓ என்னும் இரண்டும் சொல்லுக்கு ஈற்றில் நின்றே வினப்பொருளைத் தரும். ஏ என்பது சொல்லுக்கு முதல், ஈறு ஆகிய இரண்டிடங்களிலும் நின்று வினப்பொருளைத் தரும்.

(உ - ம்.) **எவன்? எவள்? எவர்? எது? எவை?**
**யாவன்? யாவள்? யாவர்? யாது? யாவை?**

எ, யா இரண்டும் சொல்லுக்கு முதலில் நின்று வினப் பொருளைத் தந்தன.

இராமனா? கண்ணனா? பசுவோ? எருமையோ?

ஆ, ஓ இரண்டும் சொல்லுக்கு ஈற்றில் நின்று வினப்பொருளைத் தந்தன.

ஏவன்? ஏது? அது உண்டே? (அது உண்டா?)

ஏ சொல்லுக்கு முதல் ஈறு ஆகிய இரண்டிடங்களிலும் நின்று வினப்பொருளைத் தந்தது.

5. வினவும் அக வினா, புற வினா என இரு வகைப் படும்.

6. அக வினா:—சொல்லினின்றும் பிரிக்க இயலாத தாய், அதற்குள்ளேயே வினவெழுத்து அமைந்து வினப் பொருளைத் தருவது அக வினவாம்.

(உ - ம்.) **எவன்? ஏவன்? யாவன்?**

இச்சொற்களுள் வினவெழுத்துக்கள் இவற்றினின்றும் பிரிக்க இயலாதவாறு நின்று வினப்பொருளைத் தந்தமை காண்க.

7. புற வினா:—சொல்லினின்றும் பிரிக்க இயல்வதாய்ச் சொல்லிற்குப் புறத்தில் வினவெழுத்து அமைந்து வினப் பொருளைத் தருவது புற வினவாம்.

(உ - ம்.) **எப்பொருள்? யாங்ஙனம்? பொன்னனா? பொன்னனோ? பொன்னனே?**

குறிப்பு :—எ, யா இரண்டும் மொழிக்கு முதலில் அக வினுவாகவும் புற வினுவாகவும் வரும். ஆ, ஓ இரண்டும் மொழிக்கு ஈற்றில் புற வினுவாக மட்டும் வரும். ஏ என்பது மொழிக்கு முதலில் அக வினுவாகவே வரும்; மொழிக்கு ஈற்றில் புற வினுவாகவே வரும்.

பயிற்சி :

அகச்சுட்டாவது யாது? புறச்சுட்டாவது யாது? உதாரணங்கள் தருக. பின் வரும் சொற்களில் உள்ள சுட்டுக்களில் அகச்சுட்டு இவை என்றும், புறச்சுட்டு இவை என்றும் வேறு பிரித்துக் காட்டுக :—அவன், இவர், அம்மனிதன், இச்செடி, உவ்வீடு, உவன், அது, உப்பக்கம், அச்சட்டம்.

அக வினுவாவது யாது? புற வினுவாவது யாது? உதாரணங்கள் தருக. பின் வரும் வினுக்களில் அக வினு இவை என்றும், புற வினு இவை என்றும் வேறு பிரித்துக் காட்டுக:—எவன்? யார்? யாங்ஙனம்? எம்மனிதன்? ஏது? அதுவா? இதுவோ? உண்டே?

## இனவெழுத்து

8. எழுத்துக்கள் ஒன்றோடு ஒன்று தானம், முயற்சி, அளவு, பொருள், வடிவு ஆகியவைகளில் ஒருவாறு ஒற்றுமை உடையனவாய் இருப்பதுண்டு. அவை இனவெழுத்துக்கள் எனப்படும். இனவெழுத்துக்கள் ஒன்றுக்கொன்று இனமான எழுத்துக்களாம்.

9. உயிர் எழுத்துக்களில் குற்றெழுத்துக்கள் ஐந்திற்கும் அவற்றின் பின்னின்ற நெட்டெழுத்துக்கள் ஐந்தும் இனவெழுத்துக்களாம். தமக்கு முன் குற்றெழுத்துக்களைப் பெருத ஐகாரத்திற்கும், ஔகாரத்திற்கும் முறையே இகர உகரங்கள் இனவெழுத்துக்கள் ஆகும்.

(உ - ம்.) அ-ஆ; இ-ஈ; உ-ஊ; எ-ஏ; ஒ-ஓ; ஐ-இ; ஔ-உ.

10. மெய்யெழுத்துக்களில் வல்லினம் ஆறுக்கும் முறையே அவற்றின் பின்னிற்கும் மெல்லினம் ஆறும் இனமாம். இடையினம் ஆறும் ஓரினமாம்.

(உ - ம்.) க்-ங் ; ச்-ஞ் ; ட்-ண் ; த்-ந் ; ப்-ம் ; ற்-ன் ;
ய், ர், ல், வ், ழ், ள்.

## மாத்திரை

11. ஒவ்வோர் எழுத்தையும் ஒலிக்க வேண்டிய கால அளவைக் குறிப்பது மாத்திரையாம். கண்ணிமைப்பொழுதும் கைந்நொடிப்பொழுதும் மாத்திரைக்கு அளவாகும். ஒரு முறை கண் இமைத்தல் அல்லது ஒரு முறை கைந்நொடித்தல் ஒரு மாத்திரை ஆகும்.

உயிர்க்குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று. உயிர் நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு. மெய்யெழுத்துக்கு மாத்திரை அரை. உயிர்மெய்க் குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று. உயிர்மெய் நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு. ஆய்த எழுத்துக்கு மாத்திரை அரை.

**பயிற்சி :**

**இன எழுத்தாவது யாது? உயிரெழுத்துக்களில் இ, உ என்னும் எழுத்துக்களுக்கும், மெய்யெழுத்துக்களில், ச, ட, ற, ங, ந என்பவைகளுக்கும் இனவெழுத்துக்களைக் குறிப்பிடுக. மாத்திரையாவது யாது? உயிர்க்குற்றெழுத்து, உயிர்மெய் நெட்டெழுத்து, ஆய்த எழுத்து, மெய்யெழுத்து இவற்றிற்கு மாத்திரை குறிப்பிடுக. பின் வரும் வாக்கியத்திலுள்ள எழுத்துக்களுக்குத் தனித்தனி மாத்திரை எத்தனை:— இராமன் வேகமாய் ஓடினான்.**

## மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்

12. பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும், உயிரோடு கூடிய க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங என்னும் பத்து மெய்யெழுத்துக்களும் மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களாம்.

(உ - ம்.) அரசு, ஆட்டம், இடம், ஈகை, உப்பு, ஊர், எருது, ஏற்றம், ஐயம், ஒட்டகம், ஓட்டம், ஔவை. பன்னிரண்டு உயிரும் மொழிக்கு முதலில் வந்தன. கங்கை, சங்கு, தாள், நிலம், பந்து, மடவன், வீடு, யானை, ஞண்டு, ஙனம்.

பத்து மெய்களும் உயிர்களோடுகூடி மொழிக்கு முதலாயின. (ஙனம்—விதம்.)

13. உயிருடன் கூடி மொழிக்கு முதலாகும் எனக் கூறப்பட்ட பத்து மெய் எழுத்துக்களுள் க, ச, த, ந, ப, ம என்னும் ஆறும், பன்னிரண்டு உயிர்களோடும் கூடி மொழிக்கு முதலாகும்.

(உ - ம்.) கனி, காடு, கிளி, கீரை, குனி, கூறு, கெடு, கேள், கை, கொடு, கோடு, கௌவை.

சங்கு, சாய், சிரி, சீர், சுடு, சூடு, செடி, சேர், சைவம், சொல், சோர்வு, சௌக்கியம்.

தட்டு, தானம், திருட்டு, தீ, துணி, தூண், தெய்வம், தேர், தை, தொடு, தோள், தௌவை.

நண்டு, நாண், நிமிர், நீர், நுனி, நூறு, நெய், நேர், நைதல், நொய், நோய், நௌவி.

பட்டு, பாம்பு, பிணி, பிடு, புளி, பூ, பெட்டு, பேய், பையன், பொருள், போது, பௌவம்.

மணி, மாதம், மிடி, மீன், முறம், மூன்று, மெய், மேய், மைந்தன், மொள், மோர், மௌவல்.

14. வகரம், அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்னும் எட்டு உயிர்களோடு கூடி மொழிக்கு முதலாகும்.

(உ - ம்.) வடு, வாழ், விழி, வீடு, வெளி, வேகம், வையகம், வௌவால்.

15. யகரம் அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ என்னும் ஆறு உயிர்களோடு கூடி மொழிக்கு முதலாகும்.

(உ - ம்.) யவனர், யாறு, யுத்தம், யூகம், யோசனை, யௌவனம்.

16. ஞகரம் அ, ஆ, எ, ஒ என்னும் நான்கு உயிர்களுடன் கூடி மொழிக்கு முதலாகும்.

(உ - ம்.) ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்குதல்.

17. மூன்று சுட்டெழுத்துக்கள், எகர வினா, யா வினா ஆகிய இவற்றின்முன் ஙகரம் அகரத்துடன் கூடி மொழிக்கு முதலாகும்.

(உ - ம்.) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம்?

## மொழிக்கு ஈற்றில் வரும் எழுத்துக்கள்

18. பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும், ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்ற பதினொரு மெய் எழுத்துக்களும், குற்றியலுகரமும் மொழிக்கு ஈற்றில் வரும் எழுத்துக்களாம்.

(உ - ம்.) பல, பலா, கிளி, தீ, கடு, பூ, எ, தே, இலை, நொ, போ, தௌ.

பன்னிரண்டு உயிர்களும் மொழிக்கு ஈறாயின.

உரிஞ், உண், பொருந், இடம், மன், காய், வேர், தோல், தெவ், வாழ், முள்.

பதினொரு மெய்களும் மொழிக்கு ஈறாயின.

ஆது, அஃது, அரசு, பட்டு, அன்று, மார்பு.

குற்றியலுகரங்கள் மொழிக்கு ஈறாயின.

பயிற்சி:

பன்னிரண்டு உயிர்களோடும் கூடி மொழிக்கு முதலாகும் எழுத்துக்கள் எவை? உதாரணங்கள் தருக. யகரம், வகரம் இவை எந்தெந்த உயிர்களோடு கூடி மொழிக்கு முதலாகும்? உதாரணங்கள் தருக. மொழிக்கு முதல் ஆகாத எழுத்துக்கள் எவை? மொழிக்கு ஈறாகும் எழுத்துக்கள் எவை? உதாரணங்கள் தருக.

## II. சொல்

19. சொல் அல்லது பதம் என்பது பகாப்பதம், பகு பதம் என இரு வகைப்படும்.

20. பகாப்பதம்:—பிரிக்க முடியாத தன்மையை உடைய பதம் பகாப்பதம்.

(உ - ம்.) மரம், கல்.

21. பகு பதம்:—பல பிரிவுகளாகப் பிரிக்கக்கூடிய பதம் பகு பதமாம். பகு பதத்தின் பிரிவுகள் ஆறு. அவற்றுள் பகுதி, விகுதி, இடைநிலை என்னும் மூன்றும் முக்கியமானவை.

22. பகுதியாவது, பதத்தின் முதலிலுள்ள பிரிவு.

23. விகுதியாவது, பதத்தின் கடையிலுள்ள பிரிவு.

24. இடைநிலையாவது, பதத்தின் இடையிலுள்ள பிரிவு.

(உ - ம்.) செய்தான்.

இதில் செய்—பகுதி; த்—இடைநிலை; ஆன்—விகுதி.

பயிற்சி:

பதம் எத்தனை வகைப்படும்? பகு பதமாவது யாது? பகாப் பதமாவது யாது? உதாரணங்கள் தருக. பகுதியாவது யாது? விகுதியாவது யாது? இடைநிலையாவது யாது? பின் வரும் பதங்

களில் பகுபதம் இவை என்றும், பகாப்பதம் இவை என்றும் வேறு பிரித்துக் காட்டுக:—நெல், வா, தின், கை, வருதல், போனுன், நின்ருள்.

## பெயர்ச்சொல்

25. பெயர்ச்சொற்கள் எல்லாம் பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர் என ஆறு வகைப்படும் என்று முன் கூறினேம்.

பெயர்ச்சொற்கள் வேறு சில வகைகளாகவும் பிரிக்கப் படும். அவையாவன, கிளைப்பெயர், சாதிப்பெயர், அளவைப் பெயர், சுட்டுப்பெயர், விணுப்பெயர், வினையாலணையும் பெயர் என்பனவாம்.

26. கிளைப்பெயர்:—உறவின் முறையாரைக் குறித்து வரும் பெயர் கிளைப்பெயராம்.

(உ - ம்.) தந்தை, தாய், மாமன், மருமகன், மைந்தன்.

27. சாதிப்பெயர்:—சாதியைக் குறித்து வரும் பெயர் சாதிப்பெயராம்.

(உ - ம்.) அந்தணன், அரசன், வணிகன், மறவன், குறவன், வேளாளன், நாவிதன், வண்ணுன்.

28. அளவைப்பெயர்:—பொருள்களின் அளவைக் குறித்து வரும் பெயர் அளவைப்பெயராம். அஃது எண்ண லளவைப்பெயர், எடுத்தலளவைப்பெயர், முகத்தலளவைப் பெயர், நீட்டலளவைப்பெயர் என நான்கு வகைப்படும்.

(உ - ம்.) நான்கு, ஐம்பது, நூறு, பதினுயிரம், இலட்சம், கோடி - எண்ணலளவைப் பெயர்.

மணங்கு, வீசை, சேர், பலம், தோலா - எடுத்தல் அளவைப் பெயர்.

ஆழாக்கு, படி, மரக்கால், கலம் - முகத்தலளவைப் பெயர்.

கஜம், அடி, மைல், யோசனை, காதம் - நீட்டல் அளவைப் பெயர்.

குறிப்பு :—எண்ணினடியாகவும் பெயர்கள் தோன்றுவது உண்டு. அவை எண்ணினடியாகப் பிறந்த பெயர் எனப்படும்.

(உ - ம்.) ஒருவன், ஒருத்தி, இருவர், மூவர், நால்வர்.

29. சுட்டுப்பெயர் :—சுட்டெழுத்தைப் பகுதியாகக் கொண்டு வரும் பெயர் சுட்டுப்பெயராம்.

(உ - ம்.) அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அவர், இவர், உவர், அது, இது, உது, அவை, இவை, உவை.

30. வினுப்பெயர் :—வினுவெழுத்தைப் பகுதியாகக் கொண்டு வரும் பெயர் வினுப்பெயராம்.

(உ - ம்.) எவன், எவள், எவர், எது, எவை, யாவன், யாவள், யாவர், யாது, யாவை, ஏவன், ஏவள், ஏவர், ஏது, என், என்னை, என்ன, என்னே, என்னோ.

31. வினையாலணையும் பெயர் :—வினைமுற்றுச் சொல், தன் தொழில் நிகழ்ச்சியை உணர்த்தாமல், தொழிலையும் தொழில் செய்பவனையும் உணர்த்தி, வேற்றுமைகளை ஏற்றுப் பெயர்ச்சொல்லைப்போல நடக்கும். அப்போது அது வினையாலணையும் பெயராம். அவ்வாறு வருங்கால் அது திரிந்தும், திரியாமலும் வரும்.

(உ - ம்.) படிந்தவன் தேறினன்.

இதில் 'படிந்தான்' என்னும் வினை முற்றுப் 'படித்தவன்' எனத் திரிந்து, முதல் வேற்றுமையை ஏற்று, அத்தொழிலைச் செய்தானை உணர்த்தி, வினையாலணையும் பெயர் ஆயிற்று.

தொழுதானைக் கண்டான்.

இதில் 'தொழுதான்' என்னும் வினை முற்றுத் திரியாமல் இரண்டாம் வேற்றுமையை ஏற்று, அத்தொழிலைச் செய்தானை உணர்த்தி, வினையாலணையும் பெயர் ஆயிற்று.

### வினையாலணையும் பெயருக்கும் தொழிற்பெயருக்கும் உள்ள வேறுபாடுகள் :

1. வினையாலணையும் பெயர், தொழிலையும் தொழில் செய்பவனையும் உணர்த்தும்; தொழிற்பெயர், தொழிலை மட்டும் உணர்த்தும்.

2. வினையாலணையும் பெயர், காலங்காட்டும்; தொழிற்பெயர், பெரும்பாலும் காலங்காட்டாது.

3. வினையாலணையும் பெயர், மூவிடங்கட்கும் உரியது; தொழிற்பெயர், படர்க்கை இடத்துக்கு மட்டும் உரியது.

### பயிற்சி :

கிளைப்பெயராவது யாது? உதாரணம் தருக. சாதிப் பெயராவது யாது? உதாரணம் தருக. அளவைப்பெயர் எத்தனை வகைப்படும்? அவை எவை? உதாரணங்கள் தருக. எண்ணி னடியாகப் பிறந்த பெயராவது யாது? உதாரணம் தருக. சுட்டுப் பெயராவது யாது? வினப்பெயராவது யாது? ஒவ்வொன்றுக்கும் இரண்டு இரண்டு உதாரணங்கள் தருக. வினையாலணையும் பெயராவது யாது? உதாரணங்களோடு விளக்குக. வினையாலணையும் பெயர்க்கும் தொழிற்பெயர்க்கும் உள்ள வேறுபாடுகளைக் குறிப்பிடுக.

பின் வரும் வாக்கியங்களில் கோடிடப்பட்ட பெயர்ச்சொற்கள் இன்ன வகையைச் சார்ந்தவை எனக் குறிக்க:—1. தாயும் தந்தையும் தெய்வம் ஆவர். 2. ஒன்றே செய்யினும் நன்றாய்ச் செய்க. 3. செல்வம் இல்லாதவனுக்குச் சுகம் இல்லை. 4. இவன் யாவன்? 5. இங்கு வந்த மூவரில் ஒருவன் தச்சன்.

## திணை

32. பெயர்ச்சொற்கள் திணை பற்றி உயர்திணைப் பெயர், அஃறிணைப்பெயர் என இரு வகைப்படும்.

33. உயர்திணைப்பெயர் :—உயர்திணைப் பொருள்களைக் குறிக்கும் பெயர் உயர்திணைப் பெயராம்.

(உ - ம்.) இராமன், சீதை, இந்திரன்.

34. அஃறிணைப்பெயர் :—அஃறிணைப் பொருள்களைக் குறிக்கும் பெயர் அஃறிணைப்பெயராம்.

(உ - ம்.) பசு, நாய், காக்கை, மரம், கல்.

குறிப்பு :—மனிதன் உயர்திணைப் பொருளாயினும், அவனது உடம்பையும் உயிரையும் வேறு பிரித்துக் கூறும்போதும், உடம்பிலுள்ள அவயவங்களாகிய கண், கால், தலை முதலியவற்றைத் தனித்தனியாகக் கூறும்போதும் அவை அஃறிணையாகக் கொள்ளப்படும்.

(உ - ம்.) உடம்பு அழியும் தன்மை உடையது. உயிர் போய்விட்டது. கண் கலங்கிற்று. நா உலர்ந்தது.

கடவுளையும், சூரியன், சந்திரன் முதலிய தேவர்களையும் உயர்திணையாகவும் அஃறிணையாகவும் வழங்கலாம்.

(உ - ம்.) கடவுள் இருக்கிறார்; கடவுள் இருக்கிறது. சூரியன் உதித்தான்; சூரியன் உதித்தது. சந்திரன் பிரகாசிக்கிறான்; சந்திரன் பிரகாசிக்கிறது.

## பால்

35. பெயர்ச்சொற்கள் பால் பற்றி ஆண் பாற்பெயர், பெண் பாற்பெயர், பலர்பாற் பெயர், ஒன்றன் பாற்பெயர், பல வின் பாற்பெயர் என ஐவகைப்படும்.

36. ஆண் பாற்பெயர் :—ஆண்பாலைக் குறிக்கும் பெயர் ஆண் பாற்பெயராம்.

(உ - ம்.) அரசன், மனிதன், இராமன், இந்திரன்.

37. பெண் பாற்பெயர் :—பெண் பாலைக் குறிக்கும் பெயர் பெண் பாற்பெயராம்.

(உ - ம்.) பெண், அரசி, சீதை, இந்திராணி.

38. பலர் பாற்பெயர் :—பலர் பாலைக் குறிக்கும் பெயர் பலர் பாற்பெயராம்.

(உ - ம்.) மனிதர், பெண்டிர், தேவர், மக்கள்.

39. ஒன்றன் பாற்பெயர் :—ஒன்றன் பாலைக் குறிக்கும் பெயர் ஒன்றன் பாற்பெயராம்.

(உ - ம்.) பசு, நாய், மயில், கிளி, மரம்.

40. பலவின் பாற்பெயர் :—பலவின் பாலைக் குறிக்கும் பெயர் பலவின் பாற்பெயராம்.

(உ - ம்.) பசுக்கள், நாய்கள், மரங்கள், கற்கள்.

## எண்

41. பெயர்ச்சொற்கள் எண் வகையால் ஒருமைப் பெயர், பன்மைப்பெயர் என இரு வகைப்படும்.

42. ஒருமைப்பெயர் :—ஒரு பொருளைக் குறித்து வரும் பெயர் ஒருமைப்பெயராம்.

(உ - ம்.) மனிதன், நாய், கிளி, மரம், கல்.

43. பன்மைப்பெயர் :—பல பொருள்களைக் குறித்து வரும் பெயர் பன்மைப்பெயராம்.

(உ - ம்.) மனிதர், நாய்கள், கிளிகள், மரங்கள்.

## இடம்

44. பெயர்ச்சொற்கள் இடவகையால் தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர், படர்க்கைப்பெயர் என மூவகைப்படும்.

45. தன்மைப்பெயர் :—தன்மை இடத்தைக் குறித்து வரும் பெயர் தன்மைப்பெயராம்.

(உ - ம்.) நான், யான், நாம், யாம், நாங்கள், யாங்கள்.

46. முன்னிலைப்பெயர் :—முன்னிலை இடத்தைக் குறித்து வரும் பெயர் முன்னிலைப் பெயராம்.

(உ - ம்.) நீ, நீர், நீயிர், நீவிர், நீங்கள், எல்லீர்.

47. படர்க்கைப்பெயர் :—படர்க்கை இடத்தைக் குறித்து வரும் பெயர் படர்க்கைப்பெயராம்.

(உ - ம்.) அவன், அவள், அவர், அது, அவை, கல், மண்.

குறிப்பு :—தன்மை, முன்னிலை அல்லாத பெயர்கள் எல்லாம் படர்க்கைப் பெயர்களாம்.

எல்லாம் என்பது மூவிடங்கட்கும் பொதுவாய் வரும் பெயராம்.

(உ - ம்.) யாமெல்லாம் சென்றோம்; நீவிர் எல்லாம் சென்றீர்; அவரெல்லாம் வந்தனர்.

[தன்மை முன்னிலைப் பெயர்களில் இரு திணை ஐம்பால்கள் தோன்ரு. படர்க்கைப் பெயரில் எல்லாம் தோன்றும். இவ்வாறு தோன்றுவதை முன்னர்க் காட்டியுள்ள உதாரணங்களாற் காண்க.]

### பயிற்சி :

திணை பற்றிப் பெயர் எத்தனை வகைப்படும்? அவை எவை? உதாரணங்கள் தருக. கடவுள், சூரியன், சந்திரன், கை, கால், கண் இவற்றை எத்திணையாகக் கொள்ளலாம்? பால் வகையாற் பெயர்கள் எத்தனை வகைப்படும்? அவை எவை? உதாரணங்கள் தருக. ஒருமைப் பெயராவது யாது? பன்மைப் பெயராவது யாது? தன்மைப் பெயராவது யாது? முன்னிலைப்பெயராவது யாது? படர்க்கைப்பெயராவது யாது? எல்லாம் என்பது எவ்விடத்திற்குரியது? தன்மை முன்னிலைப் பெயர்களிடத்து என்னென்ன தோன்ரு? படர்க்கைப் பெயரிடத்து இரு திணை ஐம்பால்கள் தோன்றுவதை உதாரணங்கள் மூலம் விளக்குக. பின்வரும் வாக்கியங்களில் கோடிட்ட பெயர்ச்சொற்கள் இன்ன திணை, பால், எண், இடங்களுக்குரியவை எனக் குறிக்க :— அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும். இந்திரன், அக்கினி, இயமன் முதலிய தேவர்கள் திக்குப்பாலகர் எனப்படுவார்கள். நீவிர் எல்லீரும் எங்குச் சென்றீர்? யாம் எல்லாம் ஊரைச் சுற்றிப் பார்க்கச் சென்ருேம். கோபத்தால் அவனது கண்கள் சிவந்தன.

### வேற்றுமை

48. முதல் வேற்றுமை:—இது கருத்தா வேற்றுமை எனவும், எழுவாய் வேற்றுமை எனவும் பெயர் பெறும். இதற்கு உருபு இல்லை. ஆயினும், ஆனவன், ஆனது, என்பவன், என்பது இவை போன்ற ஐம்பாற்சொற்களும் இம்முதல் வேற்றுமையோடு சேர்ந்து வருவதும் உண்டு.

இதன் பொருளாவது, இவ்வேற்றுமையை ஏற்ற பெயர், பெயரையும், வினையையும், வினவையும் பயனிலையாகக் கொண்டு முடிவதாம்.

(உ - ம்.) முகுந்தன் அவன்—பெயர்ப் பயனிலை.
முகுந்தன் படித்தான்—வினைப் பயனிலை.
முகுந்தன் யார்?—வினப் பயனிலை.

இவ்வாக்கியங்களுள் முகுந்தன் என்பது முதல் வேற்றுமையை ஏற்றுப் பெயர், வினை, வின ஆகியவற்றைப் பயனிலையாகக் கொண்டு முடிந்தது.

முகுந்தனானவன் வந்தான்.
முகுந்தன் என்பவன் வந்தான்.
பசுவானது சென்றது.
பசு என்பது ஒரு மிருகம்.

இவற்றுள் முகுந்தன் என்னும் முதல் வேற்றுமைப் பெயரோடு ஆனவன், என்பவன் என்பவையும், பசு என்னும் முதல் வேற்றுமைப்பெயரோடு ஆனது, என்பது என்பவையும் சேர்ந்து வந்தன.

49. இரண்டாம் வேற்றுமை:—இதன் உருபு ஐ என்பது. இவ்வேற்றுமைக்கு உரிய பொருள் செயப்படுபொருள். ஆதலின், இதற்குச் செயப்படுபொருள் வேற்றுமை என்றும் பெயர் உண்டு. [செயப்படு பொருளாவது, கருத்தாவின் தொழிலினால் உண்டாகும் பயனை அடையும் பொருளாம்.]

(உ - ம்.) வீட்டை அடைந்தான்.
கோயிலைக் கட்டினான்.

இவ்வாக்கியங்களிலுள்ள அடைதல், கட்டுதலாகிய கருத்தாக்களின் தொழில்களால் உண்டாகும் பயனை அடைந்தவை, முறையே வீடு, கோயில் ஆகியவை. ஆதலால், வீட்டை, கோயிலை என்பவை செயப்படு பொருளாயின.

50. மூன்றும் வேற்றுமை:—இதன் உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு என்பன. உடன், கொண்டு என்பவை இதற்குச் சொல்லுருபுகளாய் வரும். [சொல்லுருபுகளாவன, உருபுகள் அல்லாத சொற்கள் உருபுகள் போல வருவனவாம்.]

இவ்வேற்றுமை கருவிப் பொருள், கருத்தாப் பொருள், உடனிகழ்ச்சிப் பொருள் என்ற மூன்று பொருள்களில் வரும்.

இதன் உருபுகளில் ஆல், ஆன் என்பவை கருவி, கருத்தா ஆகிய பொருள்களிலும், ஒடு, ஓடு என்பவை உடனிகழ்ச்சிப் பொருளிலும் வரும்.

இதன் சொல்லுருபுகளுள் கொண்டு என்பது ஆல், ஆன் இவற்றிற்குப் பதிலாகவும், உடன் என்பது ஒடு, ஓடு இவற்றிற்குப் பதிலாகவும் வரும்.

(உ-ம்.) வாளால் அறுத்தான்.<br>படியான் அளந்தான். } கருவிப் பொருள்

இவற்றிலுள்ள அறுத்தல், அளத்தல் என்னும் தொழில்களுக்கு முறையே வாள், படி என்பவை கருவிகளாய் இருத்தலின், வாளால், படியான் என்பவை கருவிப்பொருளில் வந்தனவாம்.

குயவனால் பானை வனையப்பட்டது.<br>தச்சனான் மேஜை செய்யப்பட்டது. } கருத்தாப் பொருள்

இவற்றிலுள்ள பானை, மேஜை இவற்றைச் செய்தவர் முறையே குயவன், தச்சன் ஆகியோர். ஆதலின், குயவனால், தச்சனான் என்பவை கருத்தாப் பொருளில் வந்தனவாம்.

மேற்கூறியவற்றிலிருந்து ஆல், ஆன் என்னும் உருபுகள் கருவி, கருத்தா ஆகிய பொருளில் வந்திருத்தல் காண்க.

மாணவரோடு ஆசிரியர் வந்தார்.<br>தாயொடு மகள் போனாள். } உடனிகழ்ச்சிப் பொருள்

இவற்றிலுள்ள ஆசிரியர், மகள் இவர்களின் செயல்களாகிய வருதல், போதல் ஆகியவை மாணவர், தாய் இவர்களிடத்திலும் உடன் நிகழ்வதால், இவை உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தனவாம்.

இவற்றுள் ஒடு, ஓடு என்னும் உருபுகள் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தன காண்க.

வாள்கொண்டு வெட்டினன்.
இராமனுடன் சென்றான். } சொல்லுருபுகள் வந்தன.

51. நான்காம் வேற்றுமை:—இதன் உருபு கு என்பது. இதன் பொருள் இன்னதற்கு இன்னது என்பது பொருந்த வருதலாம்.

(உ-ம்.) வசுதேவர்க்கு மைந்தன் கண்ணன்.
கூலிக்கு வேலை செய்தான்.
காப்பிற்குப் பொன் கொடுத்தான்.

இவையெல்லாம் இன்னதற்கு இன்னது என்பது பொருந்த வந்தமை காண்க.

இவ்வேற்றுமையில் உருபுக்குப் பின் ஆக என்பது சேர்தலும், சொல்லுருபுகளாகப் பொருட்டு, நிமித்தம் என்பனவும் வரும்.

(உ-ம்.) கூலிக்காக வேலை செய்தான்.
கூலியின்பொருட்டு வேலை செய்தான்.
கூலியின்நிமித்தம் வேலை செய்தான்.

52. ஐந்தாம் வேற்றுமை:—இதன் உருபுகள் இல், இன் என்பனவாம். இது நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது ஆகிய பொருள்களில் வரும்.

(உ-ம்.) குற்றவாளி நாட்டில் நீங்கினன்—நீங்கற்பொருள்.
காக்கையிற் கரிது களம்பழம்—ஒப்புப்பொருள்.
சென்னையின் தெற்கு நாகை—எல்லைப்பொருள்.
தவத்தில் உயர்ந்தவர் முனிவர்—ஏதுப்பொருள்

இவ்வுருபுகளில் இல் என்பதனுடன் இருந்து, இருந்தும் என்பனவும், இன் என்பதனுடன் நின்று, நின்றும் என்பனவும் சேர்ந்து வரும்.

(உ - ம்.) நாட்டிலிருந்து நீங்கினன்.
நாட்டிலிருந்தும் நீங்கினன்.
ஊரினின்று நீங்கினன்.
ஊரினின்றும் நீங்கினன்.

53. ஆறும் வேற்றுமை :—இதன் உருபுகள் அது, ஆது, அ என்பவைகளாம். இதன் பொருள் கிழமைப் பொருளாம். [கிழமைப் பொருளாவது, ஒன்றினோடு ஒன்றுக்குள்ள சம்பந்தத்தைக் குறிக்கும் பொருள்.]

(உ - ம்.) கந்தனது வீடு
இராமனது குதிரை } கிழமைப் பொருள்.

இவற்றிலுள்ள வீடு, குதிரை முதலியவற்றிற்கு உரியவர்கள் கந்தன், இராமன் ஆகியவர்கள். ஆகையால், இவை கிழமைப் பொருளில் வந்தனவாம்.

இவ்வேற்றுமைக்கு உடைய என்பது சொல்லுருபாய் வரும்.

(உ - ம்.) இராமனுடைய புத்தகம்.

54. ஏழாம் வேற்றுமை :—இதன் உருபுகளாவன கண், இல் என்பனவாம். இதன் பொருள் இடப்பொருளாம். [இடப்பொருளாவது, இவ்வேற்றுமையில் வரும் பெயர்கள் பொருள்களுக்கு இடமாய் நிற்றலாம்.]

(உ - ம்.) வீட்டின்கண் இருந்தான்.
கையில் விரல்கள் உள்ளன. } இடப் பொருள்.

இவற்றிலுள்ள வீடு, கை என்பன மனிதன், விரல் என்பவற்றிற்கு இடமாய் இருத்தலின், இவை இடப்பொருளில் வந்தனவாம்.

55. எட்டாம் வேற்றுமை :—இதனை விளி வேற்றுமை என்பர். இது விளித்தல் பொருளில் வரும். [விளித்தல்=அழைத்தல்.] இவ்வேற்றுமையில் பெயர்கள் ஈறு திரிதல், ஈறு குன்றல், ஈறு மிகுதல், இயல்பாதல், ஈற்றயல் எழுத்துத் திரிதல், ஈறு கெட்டு அயல் நீளுதல், ஈறு கெட்டு அயல் நீண்டு ஓகாரம் மிகுதல் என்னும் வேறுபாடுகளை அடையும். [குன்றுதல்=கெடுதல்.]

(உ-ம்.) பிள்ளை—பிள்ளாய் !—ஈறு திரிந்தது.
மைந்தன்—மைந்த !—ஈறு குன்றியது.
மகன்—மகனே !—ஈறு மிகுந்தது.
தம்பி—தம்பீ !—ஈறு இயல்பாயிற்று.
பிள்ளை—பிள்ளைகாள் !—ஈற்றயலெழுத்துத் திரிந்தது.
அண்ணன்—அண்ணா !—ஈறு கெட்டு அயல் நீண்டது.
அப்பன்—அப்பாவோ !—ஈறு கெட்டு, அயல் நீண்டு, ஓகாரம் மிகுந்தது.

குறிப்பு :—தன்மைப் பெயர்களும், முன்னிலைப் பெயர்களும், நான், தாம் என்னும் படர்க்கைப் பெயர்களும், சுட்டுப் பெயர்களும், வினாப் பெயர்களும் விளி வேற்றுமையை ஏற்காவாம்.

## வேற்றுமைகளை ஏற்கும்போது திரியும் பெயர்கள்

56. வேற்றுமைகளை ஏற்கும்போது சில பெயர்கள் திரிந்து வரும். அவை, யான், யாம், நாம், நீ, நீர், தான், தாம் என்பவை.

1. யான் என்பது, என் எனத் திரியும்.

(உ-ம்.) யான், என்னை, என்னால், எனக்கு, என்னின், எனது, என்னிடம்.

2. யாம் என்பது, எம் எனத் திரியும்.

(உ-ம்.) யாம், எம்மை, எம்மால், எமக்கு, எம்மின், எமது, எம்மிடம்.

[இதனோடு கள் என்பது சேர்ந்து, யாங்கள், எங்களை, எங்களால், எங்களுக்கு, எங்களின், எங்களது, எங்களிடம் எனவும் வருவதுண்டு.]

3. நாம் என்பது, நம் எனத் திரியும்.

(உ-ம்.) நாம், நம்மை, நம்மால், நமக்கு, நம்மின், நமது, நம்மிடம்.

4. நீ என்பது, நின் எனவும், உன் எனவும் திரியும்.

(உ-ம்.) நீ, நின்னை, நின்னால், நினக்கு, நின்னின், நினது, நின்னிடம்.

நீ, உன்னை, உன்னால், உனக்கு, உன்னின், உனது, உன்னிடம்.

5. நீர் என்பது, நும் எனவும், உம் எனவும் திரியும்.

(உ-ம்.) நீர், நும்மை, நும்மால், நுமக்கு, நும்மின், நுமது, நும்மிடம்.

நீர், உம்மை, உம்மால், உமக்கு, உம்மின், உமது, உம்மிடம்.

[திரிந்த உம் என்பதோடு கள் என்பது சேர்ந்து, உங்களை, உங்களால், உங்களுக்கு, உங்களின், உங்களது, உங்களிடம் எனவும் வருவதுண்டு.]

6. தான் என்பது, தன் எனத் திரியும்.

(உ-ம்.) தான், தன்னை, தன்னால், தனக்கு, தன்னின், தனது, தன்னிடம்.

7. தாம் என்பது, தம் எனத் திரியும்.

(உ-ம்.) தாம், தம்மை, தம்மால், தமக்கு, தம்மின், தமது, தம்மிடம்.

[இதனோடு கள் என்பது சேர்ந்து, தாங்கள், தங்களை, தங்களால், தங்களுக்கு, தங்களின், தங்களது, தங்களிடம் எனவும் வரும்.]

57. வேற்றுமை உருபுகள் மறைந்து வருவது வேற்றுமைத்தொகை என்றும், வெளிப்படையாய் வருவது வேற்றுமை விரி என்றும் சொல்லப்படும்.

இவ்வாறு மறைந்து வருவன, இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரையிலுமாம். முதல் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் தொகையாக வாரா.

(உ-ம்.) வேற்றுமைத் தொகை—வேற்றுமை விரி

இரண்டாம் வேற்றுமை—பழம் தின்றாள்—பழத்தைத் தின்றாள்.
மூன்றாம் வேற்றுமை —நூல் கட்டினான்—நூலால் கட்டினான்.
நான்காம் வேற்றுமை —அரசன் மகன் —அரசனுக்கு மகன்.
ஐந்தாம் வேற்றுமை —ஊர் நீங்கினான் —ஊரின் நீங்கினான்.
ஆறாம் வேற்றுமை —என் புத்தகம் —எனது புத்தகம்.
ஏழாம் வேற்றுமை —கைக்கொண்டான்—கையில் கொண்டான்.

பயிற்சி :

எட்டு வேற்றுமைக்கும் உரிய உருபுகளைக் குறிப்பிடுக. சொல்லுருபாவது யாது? எந்தெந்த வேற்றுமைகளுக்கு எவ்வெவை சொல்லுருபுகளாய் வரும்? உதாரணங்கள் தருக. எட்டாம் வேற்றுமையில் பெயர்கள் என்னென்ன மாறுபாடுகளை அடையும் என்பதை உதாரணங்களால் விளக்குக. முதல் வேற்றுமை எவற்றைக்கொண்டு முடியும்? உதாரணங்கள் தருக. நான்காம் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை இவைகளுக்குப் பொருள் கூறி உதாரணங்கள் தருக. மூன்றாம் வேற்றுமை உடனிகழ்ச்சிப் பொருளுக்கு இரண்டு உதாரணங்கள் தருக. வேற்றுமையை ஏற்கும்போது திரியும் பெயர்களையும், அவை திரியும் விதங்களையும் விளக்குக. எந்தெந்தப் பெயர்கள் விளி வேற்றுமையை ஏலா? வேற்றுமைத் தொகையாவது யாது? வேற்றுமை விரியாவது

யாது? எவ்வேற்றுமைகள் தொகைகளாக வாரா? பின் வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்துச் சொற்கள் என்னென்ன வேற்றுமையை ஏற்று வந்தன எனக் கூறுக:—1. அறிவுடையார் எக் காரியத்தையும் எளிதில் செய்வர். 2. கோயிலுக்குச் செல்லுதல் நன்று. 3. வேலனது நாய் நல்ல நாய். 4. மலையின்கண் மூங்கில் மிகுதி. 5. மரத்தினின்று பழம் உதிர்ந்தது. 6. நண்ப! நீ சொல்லுவது மிகவும் நல்லது. 7. தங்காய்! ஒரு பாட்டுப் பாடு. பின் வரும் வேற்றுமை விரிகளை வேற்றுமைத் தொகைகளாகவும் வேற்றுமைத் தொகைகளை வேற்றுமை விரிகளாகவும் மாற்றுக:— 1. என்னிடம் ஒரு பழத்தைக் கொடு. 2. இது வேலன் புத்தகம். 3. நண்பன் வீடு சென்றான். 4. காலையும் மாலையும் கடவுளை வணங்கு. 5. இது மலைப்பழம்.

## வினைச்சொல்

58. வினைச்சொல்லாவது, பொருளின் தொழிலை உணர்த்தும் சொல்லாம். அது திணை, பால், எண், இடம், காலம் இவற்றைக் காட்டும்.

### வினைச்சொல்லின் வகைகள்

59. வினைச்சொற்களை ஒரு விதத்தில் செயப்படு பொருள் குன்றிய வினை, செயப்படு பொருள் குன்றா வினை என இரு வகையாகப் பிரிக்கலாம்.

[இவை முதல் பாரப் பகுதியில் கூறப்பட்டிருத்தல் காண்க.]

60. வினைச்சொற்களை மற்றொரு விதத்தில் தன்வினை, பிறவினை என இரு வகையாகப் பிரிக்கலாம்.

61. தன்வினை:—ஒரு தொழிலை ஒருவன் தானே செய்வது தன்வினையாம்.

(உ-ம்.) படித்தேன், நடந்தாய், அடித்தான்.

62. பிறவினை :—ஒரு தொழிலை ஒருவன் பிறரைக் கொண்டு செய்விப்பது பிறவினையாம்.

(உ - ம்.) படிப்பித்தேன், கட்டுவித்தாய், உண்பித்தான்.

63. தன்வினைகளின் கடைசியில் வி, பி, கு, சு, டு, து, பு, று என்னும் பிறவினை விகுதிகளுள் ஒன்றைச் சேர்த்தால், அவை பிறவினையாகும்.

(உ - ம்.) தன்வினை—பிறவினை—விகுதி.

| | | |
|---|---|---|
| செய் | —செவ்வி | —வி. |
| படி | —படிப்பி | —பி. |
| போ | —போக்கு | —கு. |
| பாய் | —பாய்ச்சு | —சு. |
| உருள் | —உருட்டு | —டு. |
| இரு | —இருத்து | —து. |
| எழு | —எழுப்பு | —பு. |
| துயில் | —துயிற்று | —று. |

64. வினைச்சொற்களை வேறொரு விதத்தில் செய்வினை, செயப்பாட்டு வினை என இரு வகையாகப் பிரிக்கலாம்.

65. செய்வினை :—கருத்தாவின் தொழிலை நேராய்க் குறித்துக்காட்டும் வினை செய்வினையாம்.

(உ - ம்.) இராமன் கிருஷ்ணனை அடித்தான்.
மாடு வண்டியை இழுத்தது.

இவற்றிலுள்ள வினைகள் கருத்தாவின் தொழிலை நேராய்க் குறித்துக் காட்டியது காண்க.

66. செயப்பாட்டு வினை :—கருத்தாவின் தொழிலைச் செயப்படுபொருள் ஏற்றதாகக் காட்டும் வினை செயப்பாட்டு வினையாம். இஃது அகரச்சாரியையும், படு விகுதியும் பெற்று வரும்.

(உ - ம்.) கிருஷ்ணன் இராமனால் அடிக்கப்பட்டான்.
வண்டி மாட்டால் இழுக்கப்பட்டது.

இவற்றிலுள்ள வினைகள் கருத்தாவின் தொழிலைச் செயப்படு பொருள் ஏற்றதாகக் காட்டியது காண்க. மற்றும் அகரச் சாரியையும் படு விகுதியும் பெற்று வந்தது காண்க.

குறிப்பு:—செய்வினை வாக்கியத்தில் இரண்டாம் வேற்றுமையை ஏற்று வரும் சொல், செயப்பாட்டு வினை வாக்கியத்தில் முதல் வேற்றுமையை ஏற்று வரும். செய்வினை வாக்கியத்தில் கருத்தா முதல் வேற்றுமையை ஏற்கும்; செயப்பாட்டு வினை வாக்கியத்தில் கருத்தா மூன்றும் வேற்றுமையை ஏற்கும்.

பயிற்சி :

வினைச்சொல்லாவது யாது? வினைச்சொற்களை எத்தனை வகையாகப் பிரிக்கலாம்? தன்வினையாவது யாது? பிறவினையாவது யாது? தன்வினைகளைப் பிறவினைகளாக்குவது எவ்வாறு? செய்வினையாவது யாது? செயப்பாட்டு வினையாவது யாது? செய்வினை வாக்கியத்திற்கும், செயப்பாட்டு வினை வாக்கியத்திற்கும் பேதம் யாது?

பின் வரும் தன்வினைகளைப் பிறவினைகளாக்கியும், பிறவினைகளைத் தன்வினைகளாக்கியும் எழுதுக:—கண்டான், உண்டான், படிப்பித்தாய், கட்டுவித்தேன், எழுதினாய்.

பின் வரும் செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாகவும், செயப்பாட்டு வினை வாக்கியங்களைச் செய்வினை வாக்கியங்களாகவும் மாற்றி அமைக்க :—

1. கண்ணன் பழம் தின்றான். 2. புலி எருதைக் கொன்றது. 3. வேடனால் பறவைகள் பிடிக்கப்பட்டன. 4. படையெடுத்து வந்த அரசனால் பல நகரங்கள் பாழாக்கப்பட்டன.

காலம்

67. காலம் மூன்று வகைப்படும். அவை இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என்பன. வினைச் சொற்களில் காலங்காட்டுவன இடை நிலைகளாம்.

68. இறந்த காலம்:—தொழில் முன்பே நடந்துவிட்டதைக் குறிக்கும் காலம் இறந்த காலமாம். த், ட், ற், இன் என்பன இறந்த காலம் காட்டும் இடைநிலைகள்.

(உ - ம்.) செய்தான் (செய் + ந் + ஆன்) } ந் இடைநிலை.
படித்தான் (படி + த் + ந் + ஆன்)

உண்டான் (உண் + ட் + ஆன்) } ட் இடைநிலை.
கொண்டான் (கொள் + ட் + ஆன்)

விற்றான் (வில் + ற் + ஆன்) } ற் இடைநிலை.
தின்றான் (தின் + ற் + ஆன்)

ஓடினான் (ஓடு + இன் + ஆன்) } இன் இடைநிலை.
பாடினான் (பாடு + இன் + ஆன்)

குறிப்பு—இறந்த கால இடைநிலைகளுள் இன் இடைநிலை சில இடங்களில் முதல் குறைந்தும், சில இடங்களில் கடை குறைந்தும் வரும்.

(உ - ம்.) போனான் (போ + இன் + ஆன்)
இதில் இன் இடைநிலை முதல் குறைந்து வந்தது.

எழுதியது (எழுது + இன் + அ + து)
இதில் இன் இடைநிலை கடை குறைந்து வந்தது.

கு, டு, று என்னும் ஈறுகளை உடைய சில குறிலிணைப் பகுதிகள் தம் ஒற்று இரட்டி இறந்த காலம் காட்டும்.

(உ - ம்.) புக்கான் (புகு + ஆன்)
நட்டான் (நடு + ஆன்)
பெற்றான் (பெறு + ஆன்)

69. நிகழ் காலம்:—தொழில் நடைபெறுகின்ற காலம் நிகழ் காலம் ஆகும். [நிகழ்ச்சி = நடப்பு.] கிறு, கின்று, ஆநின்று என்பன நிகழ் காலத்தைக் காட்டும் இடைநிலைகளாம்.

(உ - ம்.)

| | |
|---|---|
| படிக்கிறான் (படி + க் + கிறு + ஆன்)<br>செல்கிறான் (செல் + கிறு + ஆன்) | கிறு இடைநிலை. |
| நடக்கின்றான் (நட + க் + கின்று + ஆன்)<br>ஓடுகின்றான் (ஓடு + கின்று + ஆன்) | கின்று இடைநிலை. |
| பாடாநின்றான் (பாடு + ஆநின்று + ஆன்)<br>நடவாநின்றான் (நட + ஆநின்று + ஆன்) | ஆநின்று இடைநிலை. |

70. எதிர் காலம்:—தொழில் இனி நடைபெறப் போவதைத் தெரிவிப்பது எதிர் காலமாம். ப், வ் என்பன எதிர் காலத்தைக் காட்டும் இடைநிலைகளாம்.

(உ - ம்.)

| | |
|---|---|
| படிப்பான் (படி + ப் + ப் + ஆன்)<br>எடுப்பான் (எடு + ப் + ப் + ஆன்) | ப் இடைநிலை. |
| செல்வான் (செல் + வ் + ஆன்)<br>போவான் (போ + வ் + ஆன்) | வ் இடைநிலை. |

71. வினைச்சொற்கள் வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்னும் மூன்று வகையாய் வரும்.

## வினை முற்று

72. வினை முற்றாவது, பொருள் முற்றுப்பெற்று நிற்கும் வினையாம். வினை முற்றுக்களின் ஈற்றில் சில விகுதிகள் நின்று பால், எண், இடம் ஆகியவற்றைக் காட்டும். அவ்விகுதிகளாவன:—

1. தன்மை ஒருமை —விகுதி என், ஏன்.
2. தன்மைப் பன்மை — ,, எம், ஓம்.
3. முன்னிலை ஒருமை — ,, ஐ, ஆய்.
4. முன்னிலைப் பன்மை — ,, இர், ஈர்.
5. படர்க்கை ஆண் பால் — ,, அன், ஆன்.
6. படர்க்கைப் பெண் பால் — ,, அள், ஆள்.
7. படர்க்கைப் பலர் பால் — ,, அர், ஆர்.
8. படர்க்கை ஒன்றன் பால் — ,, து, உம்.
9. படர்க்கைப் பலவின் பால் — ,, அ, உம்.

73. வினை முற்றுக்கள் இவ்விதம் பால், எண், இடம், இவற்றைக் காட்டுதலால் ஒன்பது வகைப்படுவதைக் காண்க. இன்னும் இவ்வொன்பது வகை வினைமுற்றுக்களும் முக்காலத்திலும் பயின்று வருதலால் இருபத்தேழு வகையாகும்; அவற்றை அடியிற்காண்க:

| (உ-ம்.) | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் | விகுதி |
|---|---|---|---|---|
| தன்மை ஒருமை | உண்டனென் | உண்கின்றனென் | உண்பென் | என் |
| | உண்டேன் | உண்கின்றேன் | உண்பேன் | ஏன் |
| தன்மைப் பன்மை | உண்டேம் | உண்கின்றேம் | உண்பேம் | ஏம் |
| | உண்டோம் | உண்கின்றோம் | உண்போம் | ஓம் |
| முன்னிலை ஒருமை | உண்டனை | உண்கின்றனை | உண்பை | ஐ |
| | உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | ஆய் |
| முன்னிலைப் பன்மை | உண்டனிர் | உண்கின்றனிர் | உண்பிர் | இர் |
| | உண்டீர் | உண்கின்றீர் | உண்பீர் | ஈர் |
| படர்க்கை ஆண்பால் | உண்டனன் | உண்கின்றனன் | உண்பன் | அன் |
| | உண்டான் | உண்கின்றான் | உண்பான் | ஆன் |
| படர்க்கைப் பெண்பால் | உண்டனள் | உண்கின்றனள் | உண்பள் | அள் |
| | உண்டாள் | உண்கின்றாள் | உண்பாள் | ஆள் |
| படர்க்கைப் பலர் பால் | உண்டனர் | உண்கின்றனர் | உண்பர் | அர் |
| | உண்டார் | உண்கின்றார் | உண்பார் | ஆர் |
| படர்க்கை ஒன்றன்பால் | உண்டது | உண்கின்றது | உண்ணும் | து, உம். |
| படர்க்கைப் பலவின்பால் | உண்டன | உண்கின்றன | உண்ணும் | அ-உம். |

## பெயரெச்சம்

74. பொருள் முற்றுப் பெறாது நின்று பெயர்ச் சொல்லைக்கொண்டு முடிவுபெறும் வினைச்சொல் பெயரெச்சம் ஆகும்.

பெயரெச்சம், இறந்தகாலப் பெயரெச்சம் என்றும், நிகழ் காலப் பெயரெச்சம் என்றும், எதிர் காலப் பெயரெச்சம் என்றும் மூன்று வகைப்படும்.

இறந்த காலத்திலும் நிகழ் காலத்திலும் வரும் பெயரெச்சங்கள் அ என்னும் விகுதியையும், எதிர் காலத்தில் வரும் பெயரெச்சம் உம் என்னும் விகுதியையும் பெற்று வரும்.

(உ - ம்.) வந்த (பையன்)—இறந்த காலம் } அ-விகுதி.
வருகின்ற(பையன்)—நிகழ் காலம் }
வரும் (பையன்)—எதிர் காலம்—உம்-விகுதி.

## வினையெச்சம்

75. பொருள் முற்றுப் பெறாது நின்று வினைச் சொல்லைக் கொண்டு முடிவுபெறும் வினைச்சொல் வினையெச்சம் ஆகும்.

வினையெச்சம், இறந்த கால வினையெச்சம் என்றும், நிகழ் கால வினையெச்சம் என்றும், எதிர் கால வினையெச்சம் என்றும் மூன்று வகைப்படும்.

இறந்த காலத்தில் வரும் வினையெச்சங்களுக்கு உ., இ, ய் என்பவை விகுதிகளாய் வரும்.

(உ - ம்.) செய்து (வந்தான்) — உ — விகுதி.
ஓடி(ச்சென்றான்) — இ — விகுதி.
போய்(ச்சேர்ந்தான்) — ய் — விகுதி.

நிகழ் காலத்தில் வரும் வினையெச்சங்களுக்கு அ என்பது விகுதியாய் வரும்.

(உ - ம்.) படிக்க (வந்தான்) — அ —விகுதி.

எதிர் காலத்தில் வரும் வினையெச்சங்களுக்கு இன், ஆல், கால் என்பவை விகுதிகளாய் வரும்.

(உ - ம்.) தரின் (செய்வேன்) — இன் — விகுதி.
உண்டால் (தீரும்) — ஆல் — விகுதி.
செய்தக்கால் (ஆகும்)— கால் — விகுதி.

பயிற்சி:

காலமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? மூன்று காலங்கட்கும் உரிய இடை நிலைகளைக் குறிப்பிடுக.

பின் வரும் வினைச் சொற்களில் உள்ள இடை நிலைகளை எடுத்து எழுதி, அவை இன்ன காலத்தைக் காட்டுவன எனக் குறிக்க:—

உடுத்தான், காண்போம், வருவான், போயினர், உண்கிறேன்.

வினை முற்றாவது யாது? அஃது இருபத்தேழு வகைப்படுவது எவ்வாறு? மூன்றிடங்கட்கும் உரிய வினை முற்று விகுதிகளைக் குறிக்க. கீழ்க்காண்பவை இன்ன வினை முற்றுக்கள் என விளக்குக:—

நடந்தான், போவேன், செய்தாய், தின்றார், உண்டனென்.

பெயரெச்சமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? பெயரெச்ச விகுதிகள் யாவை? அவ்விகுதிகளுள் எவையெவை எந்தெந்தக் காலத்தைக் காட்டும்?

வினையெச்சமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? மூன்று காலங்கட்கும் உரிய வினையெச்ச விகுதிகளை முறையே குறிப்பிடுக.

பின் வரும் வாக்கியங்களிலுள்ள பெயரெச்ச வினையெச்சங்களை எடுத்தெழுதி, அவை இன்ன பெயரை அல்லது இன்ன வினையைக் கொண்டு முடிந்தன என்பதைக் குறிப்பிடுக.

1. இங்கு வந்த பையன் இராமன். 2. அவன் சென்ற இடம் எனக்குத் தெரியும். 3. மழை பெய்தால் பயிர்கள் செழிக்கும்.

## இடைச் சொல்

76. தனித்து வருதல் இன்றிப் பெயர் வினைகளை இடமாகக்கொண்டு பயின்று வருவது இடைச் சொல்லாம்.

வேற்றுமை உருபுகள், இடை நிலைகள், விகுதிகள், சாரியைகள், உவம உருபுகள், சுட்டுக்கள், வினாக்கள் முதலியவை இடைச் சொற்களாம்.

[இவற்றுள், வேற்றுமை உருபுகள், இடைநிலைகள், விகுதிகள், சுட்டுக்கள், வினக்கள் முதல் பாரப் பகுதியில் கூறப்பட்டுள்ளன.]

சாரியைகளாவன, அன், ன், அல், அற்று, இற்று, அத்து, இத்து, அம், ஏ, ஐ, கு, ன என்பனவாம்.

(உ - ம்.)

பலவற்றை=(பல+அற்று+ஐ)—இதில் 'அற்று' சாரியை.
செய்குவான்=(செய்+கு+வ்+ஆன்)—இதில் 'கு' சாரியை.
தொடையல்=(தொடை+அல்)—இதில் 'அல்' சாரியை.
மன்றம்=(மன்று+அம்)—இதில் 'அம்' சாரியை.
(மற்றச் சாரியைகளை வருமிடத்துக் காண்க)

உவம உருபுகளாவன, போல, ஒப்ப, நிகர, அன்ன என்பன.

(உ - ம்.)

புலிபோலப் பாய்ந்தான்; மன்னனை ஒப்ப வீற்றிருந்தான்.
தேன் நிகர் மொழி; மாரி அன்ன வண்கை.

[இவற்றைத் தவிர வேறு சில இடைச்சொற்களும் உண்டு. அவை குறிப்பாகச் சிற்சில பொருள்களை உணர்த்தும். அவை ஏ, ஓ, உம், மற்று, கோல், ஐயோ, அம்மா, சீ, ஆ முதலியன.]

## உரிச்சொல்

**77.** உரிச்சொல் பெயர் உரிச்சொல், வினை உரிச்சொல் என இரு வகைப்படும்.

பெயர் உரிச்சொல்லாவது, பெயர்ச் சொல்லைச் சார்ந்து வருவது. வினை உரிச்சொல்லாவது, வினைச்சொல்லைச் சார்ந்து வருவது.

(உ - ம்.) உறு புகழ்
கடி நகர் } பெயர் உரிச்சொல்.

நனி தின்றான்.
சாலப் பேசினான். } வினை உரிச்சொல்.

பயிற்சி :

இடைச்சொல்லாவது யாது? இடைச்சொல்லாக வருவன யாவை? சில சாரியைகளைக் குறிப்பிடுக. சில உவம உருபுகளைக் குறிப்பிடுக.

அடியில் வரும் சொற்களில் உள்ள சாரியைகளைக் குறிப்பிடுக:-

உண்குவான், குன்றம், சிலவற்றை, மரத்தை.

பின் வரும் வாக்கியங்களிலுள்ள உவம உருபுகளைக் குறிப்பிடுக :—

மதி நிகர் முகம், அன்னம் அன்ன நடையாள், புலி போல வலிமையுடையவன், கன்னனை ஒப்பக் கொடுப்பவன்.

உரிச்சொல் எத்தனை வகைப்படும்? பெயர் உரிச்சொல்லாவது யாது? வினை உரிச்சொல்லாவது யாது? உதாரணங்கள் தருக.

## சொற்றொடர்

78. சில வாக்கியங்களில் பல எழுவாய்கள் வருவதுண்டு.

(உ - ம்.) வேலனும் கந்தனும் முருகனும் விளையாடினர்.

இதில் வேலன், கந்தன், முருகன் என்ற மூன்று எழுவாய்கள் வந்திருத்தல் காண்க.

79. சில வாக்கியங்களில் பல பயனிலைகள் வருவதுண்டு.

(உ-ம்.) இராமன் இங்கே வந்தான், படித்தான், சென்றான்.

இதில் வந்தான், படித்தான், சென்றான் என்ற மூன்று பயனிலைகள் வந்திருத்தல் காண்க.

80. சில வாக்கியங்களில் பல செயப்படு பொருள்கள் வருவதுண்டு.

(உ - ம்.) கண்ணன் கடைக்குச் சென்று தேங்காயும், பழமும், வெற்றிலையும், பாக்கும் வாங்கி வந்தான்.

இதில் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு ஆகிய நான்கு செயப்படு பொருள்கள் வந்திருத்தல் காண்க.

81. சில வாக்கியங்களில் எழுவாய் மறைந்தும் வருவதுண்டு. அவ்வாறு மறைந்து வரும் எழுவாய் தோன்றா எழுவாய் என்று சொல்லப்படும்.

(உ - ம்.) இராமனைக் கண்டேன்.
பாடசாலைக்குச் சென்றாய்.
கடைக்குச் சென்றான்.

இவ்வாக்கியங்களில் முறையே, நான், நீ, அவன் என்னும் எழுவாய்கள் மறைந்து வந்திருத்தல் காண்க.

82. சில வாக்கியங்களில் வினைச்சொல்லே அன்றிப் பெயர்ச் சொல்லேனும், வினாச் சொல்லேனும் பயனிலையாக வருவதுமுண்டு. அவ்வாறு வருவன முறையே பெயர்ப் பயனிலை என்றும், வினாப் பயனிலை என்றும் சொல்லப்படும்.

(உ - ம்.) இன்று நன்றாகப் பாடம் ஒப்புவித்தவன் இராமன்.

இதில் 'இராமன்' என்னும் பெயர் பயனிலையாய் வந்தது.

அந்தப் புத்தகத்தை எடுத்தவன் யார்?

இதில் 'யார்' என்னும் வினாச்சொல் பயனிலையாய் வந்தது.

83. ஒரு வாக்கியத்தில் சாதாரணமாக எழுவாய் முதலிலும், செயப்படு பொருள் இடையிலும், பயனிலை கடையிலும் வரும்.

(உ - ம்.) பசு புல்லைத் தின்றது.

இதில் 'பசு' என்னும் எழுவாய் முதலிலும், 'புல்லை' என்னும் செயப்படு பொருள் இடையிலும், 'தின்றது' என்னும் பயனிலை கடையிலும் வந்திருத்தல் காண்க.

84. சந்தோஷம், வியப்பு, அச்சம், கோபம் முதலியவை காரணமாகச் சில சமயங்களில் இம்முறை மாறியும் வருவதுண்டு.

(உ - ம்.) ஜயித்தான் சண்டையில் இராமன்! எடு புத்தகத்தை! படி பாடங்களை! வந்தது பாம்பு! அழகிது பந்து!

இவற்றுள் எழுவாய் பயனிலை செயப்படு பொருள்கள், சந்தோஷம், வியப்பு, அச்சம், கோபம் முதலியவை காரணமாக முறை மாறி வந்தமை காண்க.

85. வாக்கியங்களின் பிரிவுகளாகிய எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் ஆகியவை அடை மொழிகளோடு கூடியும் வருவதுண்டு.

அவற்றுள் எழுவாய்க்கு அடை மொழிகளாக வருபவை எழுவாய் அடை மொழிகள் என்றும், பயனிலைக்கு அடை மொழிகளாக வருபவை பயனிலை அடை மொழிகள் என்றும், செயப்படு பொருளுக்கு அடை மொழிகளாக வருபவை செயப்படு பொருள் அடை மொழிகள் என்றும் கூறப்படும்.

[அடை மொழிகளாவன, குண விசேஷங்களைத் தெரிவித்து வரும் மொழிகளாம்.]

(உ - ம்.) மிகவும் சிறியவனான அந்தப் பையன் அதிக சாமர்த்தியமாய் அந்தக் கடினமான வேலையைச் செய்தான்.

இதில் 'பையன்' எழுவாய்; மிகவும் சிறியவனான அந்த என்பவை எழுவாய் அடை மொழிகள்; 'செய்தான்' பயனிலை; அதிக சாமர்த்தியமாய் என்பவை பயனிலை அடை மொழிகள்; 'வேலையை' செயப்படு பொருள்; அதிக கடினமான என்பவை செயப்படு பொருள் அடை மொழிகள்.

86. வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் இவற்றின் அடைமொழிகளைத் தவிர, வேறு சில சொற்களும் இடையில் வருவதுண்டு. அவை இடைப் பிற வரல் எனப்படும்.

(உ-ம்) இராமன் சிறு பையனானதால், அந்தக் காரியத்தை அவ்வளவு நன்றாகச் செய்யவில்லை.

இதில் 'இராமன்' எழுவாய்; எழுவாய் அடைமொழிகள் இல்லை; 'செய்யவில்லை' பயனிலை; 'அவ்வளவு நன்றாய்' - பயனிலை அடைமொழிகள்; 'காரியத்தை' - செயப்படு பொருள். 'அந்த' - செயப்படு பொருள் அடைமொழி; சிறு பையனானதால்- இடைப் பிற வரல்.

பயிற்சி :

பின் வரும் வாக்கியங்களிலுள்ள எழுவாய் பயனிலை செயப்படு பொருள்களை எடுத்தெழுதுக :—

1. அந்தப் பெட்டியில் புத்தகங்களும், கற்பலகைகளும், எழுது கோல்களும் உள்ளன.

2. திருடர் அந்த வீட்டில் புகுந்து நகைகளையும், வஸ்திரங்களையும், பாத்திரங்களையும் கொள்ளையிட்டனர்.

3. ஒரு பெரிய மனிதர் என் வீட்டிற்கு வந்தார்; சிறிது நேரம் சம்பாஷித்தார்; பிறகு போஜனம் செய்தார்.

4. அந்த நாயை அடித்தவன் எவன்?

5. அந்த வீட்டில் திருடிய கள்வன் இவன்.

பின் வரும் வாக்கியங்களில் வரும் எழுவாய் அடைமொழிகள்; பயனிலை அடைமொழிகள், செயப்படு பொருள் அடைமொழிகள், இடைப் பிற வரல் ஆகியவற்றை எடுத்தெழுதுக :—

1. இராமன் மிகவும் நல்ல பையன்.

2. அந்தச் சிவப்புக் குதிரை மிக வேகமாய் ஓடிற்று.

3. நீ எனது புதிய புத்தகத்தை எடுத்தாயா?

4. யான் எவ்வளவு வேண்டிக்கொண்டும், அவன் என் பேச்சைக் கேளாமல் அங்குச் சென்றான்.

5. எங்குத் தேடியும், நான் அவனைக் காணவில்லை.

## புணரியல்

## உயிர் முன் உயிர்

### குற்றியலுகரத்தின் முன் உயிர் புணர்தல்

87. குற்றியலுகரச் சொல்லின் முன் வருமொழி முதலில் உயிர் எழுத்து வந்து புணருமானால், அக்குற்றிய லுகரம் தான் ஏறியிருந்த மெய்யெழுத்தை விட்டு நீங்கும்; அப்பால், நின்ற மெய்யின்மேல் வந்த உயிர் ஏறி முடியும்.

(உ - ம்.) காடு + ஆண்டான் = காடாண்டான்.
கொக்கு + இது = கொக்கிது.
பந்து + எடு = பந்தெடு.

குறிப்பு: - சில முற்றியலுகரச் சொற்களும் உயிரெழுத்தை முதலாக உடைய வருமொழிகளோடு புணருமிடத்து இவ்வாறே புணரும்.

(உ - ம்.) கதவு + இது = கதவிது.
நிலவு + அழகிது = நிலவழகிது.

## உயிர் முன் மெய்

### வினா விளிப் பெயர்களின் முன் வல்லினம் புணர்தல்

88. ஈற்றில் வரும் ஆ, ஏ, ஓ என்னும் வினாக்களின் முன்னும், யா என்னும் வினாவின் முன்னும், விளிப் பெயர் களின் முன்னும் வருமொழி முதலில் வரும் வல்லினங்கள் இயல்பாகப் புணரும்.

(உ-ம்.) இராமனா+தந்தான்=இராமனா தந்தான்?
அவனே+சிரித்தான்=அவனே சிரித்தான்?
நீயோ+கண்டாய்=நீயோ கண்டாய்?

ஈற்று ஆ, எ, ஓ வினாக்களின் முன் வல்லினம் இயல்பாயிற்று.

(உ-ம்.) யா+கொடுத்தான்=யா கொடுத்தான்?
யா+பெற்றான்=யா பெற்றான்?
யா வினா முன் வல்லினம் இயல்பாயிற்று.

(உ-ம்.) வேலா+போ=வேலா போ.
தம்பீ+செய்=தம்பீ செய்.
விளிப்பெயர்களின் முன் வல்லினம் இயல்பாயிற்று.

## இடைச்சொல் ஏ, ஓ முன் வல்லினம் புணர்தல்

89. இடைச்சொல் ஆகிய ஏ, ஓ என்பவற்றின் முன் வருமொழி முதலில் வரும் வல்லினம் இயல்பாகப் புணரும்.

(உ-ம்.) அவனே+கண்டான்=அவனே கண்டான்.
ஓ+கொடியன்=ஓ கொடியன்.

## உயிர் முன் உயிரும் மெய்யும்

90. எகர வினா, மூன்று சுட்டு இவற்றின் முன் வருமொழி முதலில் உயிரெழுத்தேனும், யகரமேனும் முதலில் உடைய சொற்கள் வந்து புணருமானால், இடையில் வகர மெய் தோன்றும்; மெய்யெழுத்துக்களை முதலில் உடைய சொற்கள் வந்து புணருமானால், வந்த மெய்யெழுத்துக்களே மிகும்.

(உ-ம்.) எ+ஊர்=எவ்வூர்?
எ+யாறு=எவ்யாறு?

எகர வினாவின் முன் உயிரும் யகரமும் வர, வகரம் தோன்றிற்று.

(உ-ம்.) அ+உயிர்=அவ்வுயிர்
அ+யானை=அவ்யானை
இ+உடல்=இவ்வுடல்
இ+யானை=இவ்யானை
உ+இடம்=உவ்விடம்
உ+யானை=உவ்யானை

மூன்று சுட்டின் முன் உயிரும் யகரமும் வர, வகரம் தோன்றிற்று.

(உ-ம்.) எ+காடு=எக்காடு?
எ+நாய்=எந்நாய்?
எ+வீதி=எவ்வீதி?
அ+கடை=அக்கடை
இ+மனிதன்=இம்மனிதன்
உ+வீடு=உவ்வீடு

எகர வினா, மூன்று சுட்டு இவற்றின் முன் மூவின மெய்களும் வர, வந்த மெய்களே மிகுந்தன.

## மெய்ம்முன் உயிர்

### தனிக்குறிலைச் சார்ந்த மெய்களின் முன் உயிர் புணர்தல்

**91.** தனிக்குறிலைச் சார்ந்து மொழிகளின் ஈற்றில் வரும் மெய்யெழுத்துக்களின் முன் வருமொழி முதலில் உயிரெழுத்துக்கள் வந்து புணருமானால், நிலைமொழி ஈற்றில் நிற்கும் மெய்யெழுத்துக்கள் இரட்டிக்கும். [இரட்டித்தல் =இரண்டாதல்.]

(உ-ம்.) மண்+இடம்=மண்ணிடம்
கல்+எறி=கல்லெறி
புள்+ஒலி=புள்ளொலி

## மெய்ம்முன் உயிரும் மெய்யும்

### மகர ஈற்றுப் புணர்ச்சி

92. மகர ஈற்றுச் சொற்களுக்கு முன் வருமொழி முதலில் உயிரையேனும் மெய்யையேனும் உடைய சொற்கள் வந்து புணருமானால், அம்மகரம் கெட்டு, உயிரீறு போலப் புணரும்.

உயிரீறு போலப் புணர்தலாவது, வருமொழி முதலில் உயிர் வந்தால் உடம்படுமெய் பெறுதலும், வல்லினம் வந்தால் அவ்வல்லினம் மிகுதலும், மெல்லின இடையினங்கள் வந்தால் இயல்பாதலுமாம்.

(உ-ம்.) மரம் + உரி = மரவுரி
வட்டம் + ஆழி = வட்டவாழி

உயிர் வர, மகரவீறு கெட்டு, உயிரீறு போல உடம்படு மெய் பெற்றது.

(உ-ம்.) பணம் + பை = பணப்பை
மனம் + குறை = மனக்குறை

வல்லினம் வர, மகரவீறு கெட்டு, உயிரீரு போல நிற்க, வந்த வல்லெழுத்து மிக்கது.

(உ-ம்.) மரம் + நார் = மரநார்
மரம் + வேர் = மரவேர்

மெல்லினமும் இடையினமும் வர, மகரம் கெட்டு உயிரீறு போல இயல்பாயிற்று.

93. சில மகர ஈற்றுச் சொற்களின் முன் வருமொழி முதலில் வல்லினம் வந்து புணரும்போது, நிலை மொழி ஈற்று மகரம், வந்த வல்லினத்துக்கு இனமான மெல்லினமாகத் திரியும்.

(உ-ம்.) இடம் + சிறிது = இடஞ்சிறிது.
பழம் + தின்றான் = பழந்தின்றான்.

வல்லினம் வர, மகரம் அவ்வல்லினத்திற்கினமான மெல்லினமாகத் திரிந்தது.

## மெய்ம்முன் மெய்

### வகர ஈற்றுப் புணர்ச்சி

94. வகர ஈற்றுச் சுட்டுப் பெயர்களின் முன் வருமொழி முதலில் வல்லினம் வர, அவ்வகரம் ஆய்தமாகத் திரியும்; மெல்லினம் வர, மெல்லினம் ஆகும்; இடையினம் வர இயல்பாம்.

(உ-ம்.) அவ் + கடிய = அஃகடிய
வல்லினம் வர, ஆய்தமாகத் திரிந்தது.
அவ் + ஞமலி = அஞ்ஞமலி
மெல்லினம் வர, மெல்லினமாகத் திரிந்தது.
அவ் + யாறு = அவ்யாறு
இடையினம் வர இயல்பாயிற்று.
(மற்றவைகளையும் இவ்வாறே ஒட்டுக.)

**பயிற்சி:**

குற்றியலுகரத்தின் முன் உயிர் வரின், எவ்வாறு புணரும்? உதாரணம் தருக. ஈற்று வினா, யா வினா, விளிப் பெயர்கள் இவற்றின் முன் வல்லினம் வந்தால், எவ்வாறு புணரும்? உதாரணங்கள் கொடுக்க. எகர வினா, மூன்று சுட்டு இவற்றின்முன் உயிரும் யகரமும் வந்தால் எவ்வாறு புணரும்? மெய்கள் வந்தால் எவ்வாறு புணரும்? உதாரணங்கள் தருக. தனிக்குறிலைச் சார்ந்து வரும் மெய்களின்முன் உயிர் எழுத்து வந்து புணருமாயின், எவ்வாறாம்? உதாரணங்கள் தருக. மகர ஈற்றுச் சொற்களின்முன் உயிரும் வல்லினமும் வந்தால் எவ்வாறு புணரும்? உதாரணங்கள் தருக.

வகர ஈற்றுச் சுட்டுப்பெயர்களின்முன் மூவினமெய்களும் வந்தால் எவ்வாறு புணரும்? உதாரணங்கள் தருக.

பின் வரும் பதங்களைப் புணர்த்திக் காட்டுக :—

சோறு+உண்டான்; கதவு+யாது? யா+கொடுத்தான்? ஓ+பெரியன்! எ+யானை? உ+இடம்; எ+மனிதன்? புள்+ஒலி; மரம்+அடி; மணம்+பெண்; அவ்+ஞமலி.

பின் வரும் தொடர்களைப் பிரித்துக் காட்டுக :—

பஃதெடு; நீயோதந்தாய்? தம்பீசெய்; இவ்யாறு; உவ்வீடு; மண்ணிடம்; வட்டவாழி; மணப்பெண்; அஃகடிய.

## சொல்லிலக்கணம் கூறுதல் .

93. புத்தர் தமது அரசாட்சியையும் மனைவியையும் துறந்து, காட்டிற்குச் சென்று, தவம் செய்தார்.

புத்தர்—பெயர்ச்சொல், உயர் திணை, ஆண் பால், ஒருமை, முதல் வேற்றுமை, செய்தார் என்னும் பயனிலைக்கு எழுவாயாகி, பயனிலையாகிய அவ்வினை முற்றைக் கொண்டு முடிந்தது.

தமது—பொதுப் பெயர், (உயர் திணை, ஆண் பால்), உயர்வுப்பன்மை, படர்க்கை, ஆறும் வேற்றுமை, அரசாட்சி என்னும் பெயரைக் கொண்டு முடிந்தது.

அரசாட்சியை—பெயர்ச்சொல், அஃறிணை, ஒன்றன் பால், ஒருமை, படர்க்கை, இரண்டாம் வேற்றுமை, துறந்து என்னும் வினையெச்சத்திற்குச் செயப்படு பொருளாக வந்தது.

உம்—இடைச்சொல், அரசாட்சியை என்னும் பெயரோடு சேர்ந்து, எண்ணுப்பொருளைக் குறித்து நின்றது.

மனைவியை—பெயர்ச்சொல், உயர்திணை, பெண் பால், ஒருமை, படர்க்கை, இரண்டாம் வேற்றுமை, துறந்து

என்னும் வினையெச்சத்திற்குச் செயப்படு பொருளாக வந்தது.

உம்—இடைச்சொல், மனைவியை என்னும் பெயரோடு சேர்ந்து, எண்ணுப்பொருளைக் குறித்து நின்றது.

துறந்து—இறந்த கால வினையெச்சம்; செய்தார் என்னும் வினை முற்றைக் கொண்டு முடிந்தது.

காட்டிற்கு—பெயர்ச்சொல், அஃறிணை, ஒன்றன் பால், ஒருமை, படர்க்கை, நான்காம் வேற்றுமை, சென்று என்னும் வினையெச்சத்தைக் கொண்டு முடிந்தது.

சென்று—இறந்த கால வினையெச்சம், செய்தார் என்னும் வினை முற்றைக் கொண்டு முடிந்தது.

தவம்—பெயர்ச்சொல், அஃறிணை, ஒன்றன் பால், ஒருமை, படர்க்கை, இரண்டாம் வேற்றுமை, உருபு தொக்குச் செய்தார் என்னும் வினை முற்றுக்குச் செயப்படு பொருளாகி, அதனைக் கொண்டு முடிந்தது.

செய்தார்—வினை முற்று, உயர்திணை, (ஆண் பால்,) உயர்வுப்பன்மை, படர்க்கை, இறந்த காலம், புத்தர் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாயிற்று.

## பயிற்சி :

அடியிற்காணும் வாக்கியங்களிலுள்ள சொற்களுக்குச் சொல் இலக்கணம் எழுதுக :—

1. இராமர் சீதையுடனும் இலட்சுமணனுடனும் காட்டிற்குச் சென்று, பர்ண சாலையில் வசித்தார்.

2. குகன் இராமரைக் கண்டதும் அருகில் வந்து பணிந்து நின்றான்.

## பகு பத இலக்கணம் கூறுதல்

94. பகு பத இலக்கணம் கூறுதலாவது, பகு பதங்களைப் பகுதி விகுதி முதலியனவாகப் பிரித்துக் கூறுதலாம்.

(உ-ம்.) கூனன்=(கூன்+அன்) — கூன், பகுதி; அன், விகுதி.

செய்தான்=(செய்+த்+ஆன்) — செய், பகுதி; த், இடை நிலை; ஆன், விகுதி.

காட்சி=(காண்+சி) — காண், பகுதி; சி, விகுதி; ண், ட் ஆனது சந்தி.

கண்டனன் = (காண்+ட்+அன்+அன்) — காண், பகுதி; ட், இடை நிலை; அன், சாரியை; அன், விகுதி; காண் என்ற பகுதி கண் என முதல் குறுகியது விகாரம்.

பயிற்சி :

பின் வரும் பகு பதங்களுக்குப் பகு பத இலக்கணம் தருக :—
ஆட்சி, நட்பு, மறதி, சென்றான், உண்டனன், நடந்தான்.

## மூன்றாம் பாரம்

### எழுத்து

1. ஒருவன் தன் மனக் கருத்தை வெளியிடுவதற்கு மொழியைக் கருவியாகக் கொள்ளுகிறான். [மொழி = பாஷை.]

மொழிக்கு முதற்காரணமாய் உள்ளது எழுத்து அல்லது ஒலியாம். இவ்வொலிக்குக் காரணம், பல ஒலி அணுக் கூட்டங்கள். இவ்வாறு உண்டான எழுத்து, ஒலி வடிவ எழுத்து. இந்த ஒலி வடிவம் கட்புலனாகுமாறு எழுதப்படும் போது வரி வடிவ எழுத்து ஆகும்.

2. இவ்வெழுத்து முதல் எழுத்து, சார்பு எழுத்து என இரு வகைப்படும்.

ந. சூ. 'மொழிமுதல் காரணம் ஆம்அணுத் திரளொலி
எழுத்(து);அது முதல்சார்(பு)எனஇரு வகைத்தே.'

### முதல் எழுத்து

3. உயிர் எழுத்தும் மெய்யெழுத்தும் ஆகிய முப்பது எழுத்துக்களும் முதல் எழுத்து எனப்படும்.

ந. சூ. 'உயிரும் உடம்பும்ஆம் முப்பதும் முதலே.'

### சார்பு எழுத்து

4. சார்பெழுத்தாவது, முதலெழுத்துக்களைச் சார்ந்து வரும் எழுத்தாம். அது மூன்று வகைப்படும். அவை, குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்பனவாம்.

### குற்றியலுகரம்

5. குற்றியலுகரமாவது, குறுகிய ஓசையை உடைய உகரமாம். [குறுமை + இயல் + உகரம் = குற்றியலுகரம்.]

அது வல்லின மெய்யெழுத்தோடு கூடி, தனிக்குற்றெழுத்தைச் சாராமல், மொழிகளின் இறுதியில் வரும்.

(உ - ம்.) ஆடு, கயிறு, எஃகு.

6. குற்றியலுகரம், தனக்கு முன் தன்னைத் தொடர்ந்துள்ள ஈற்றயலெழுத்தை நோக்க ஆறு வகைப்படும். அவை, நெடிற்றொடர்க் குற்றியலுகரம், ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம், உயிர்த்தொடர்க் குற்றியலுகரம், வன்றொடர்க் குற்றியலுகரம், மென்றொடர்க் குற்றியலுகரம், இடைத்தொடர்க் குற்றியலுகரம் என்பனவாம்.

1. நெடிற்றொடர்க் குற்றியலுகரம்:—இது, கடைசி எழுத்துக்கு முந்திய எழுத்தாக உயிர் நெடிலையேனும், உயிர் மெய் நெடிலையேனும் பெற்றிருப்பது. இஃது, இரண்டு எழுத்து மொழியாகவே இருக்கும்.

(உ - ம்.) ஆறு, நாகு, காசு, நாடு, காது.

2. ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம்:—இது, கடைசி எழுத்துக்கு முந்திய எழுத்தாக ஆய்த எழுத்தைப் பெற்றிருப்பது.

(உ - ம்.) எஃகு, அஃது.

3. உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்:—இது, கடைசி எழுத்திற்கு முந்திய எழுத்தாக உயிர் எழுத்தைப் பெற்றிருப்பது.

உயிர் எழுத்து மொழியின் இடையில் மெய்யெழுத்தோடு சேர்ந்து உயிர்மெய்யெழுத்தாகவே வரும். அதனால், அங்ஙனம் வரும் உயிர்மெய்யெழுத்தை உயிர், மெய் என இரண்டாகப் பகுத்துக் கடைசியில் ஒலிப்பதாகிய உயிரே இங்குக் கடைசி எழுத்திற்கு முந்திய எழுத்தாகக் கொள்ளப்படும்.

(உ - ம்.) அரசு, ஆகாது, மிளகு, தராசு.

4. வன்றொடர்க் குற்றியலுகரம் :—இது, கடைசி எழுத்திற்கு முந்திய எழுத்தாக வல்லின மெய்யைப் பெற்றிருப்பது.

(உ - ம்.) பாக்கு, கச்சு, பட்டு, பத்து, உப்பு, பற்று.

5. மென்றொடர்க் குற்றியலுகரம்:—இது, கடைசி எழுத்திற்கு முந்திய எழுத்தாக மெல்லின மெய்யைப் பெற்றிருப்பது.

(உ - ம்.) சங்கு, பஞ்சு, வண்டு, பந்து, அம்பு, கன்று.

6. இடைத்தொடர்க் குற்றியலுகரம்:—இது, கடைசி எழுத்திற்கு முந்திய எழுத்தாக இடையின மெய்யெழுத்தைப் பெற்றிருப்பது.

(உ - ம்.) அல்கு, தெள்கு, சார்பு, சால்பு, மூழ்கு.

குறிப்பு :—குற்றியலுகரம் அல்லாத எல்லாம் முற்றியலுகரமாம். முற்றியலுகரமாவன, தமக்குரிய அளவில் குறையாது வரும் உகரமாம். அவை, தனி உகரமும், தனி மெய்யின்மேல் ஏறி வரும் உகரமும், தனிக்குறிலைச் சார்ந்து வல்லின மெய்களின்மேல் ஏறி வரும் உகரமும், மெல்லின இடையின மெய்களின்மேல் ஏறி வரும் உகரமுமாம்.

(உ - ம்.) உ, கு, அது, கடு, கதவு, உறுமு.

ந. சூ. 'நெடிலோ(டு) ஆய்தம் உயர்வலி மெலிஇடை
தொடர்மொழி இறுதி வன்மைஊர் உகரம்
அஃகும்; பிறமேல் தொடரவும் பெறுமே.'

குற்றியலிகரம்

7. குற்றியலுகரச் சொற்களோடு யகரத்தை முதலாக உடைய மொழிகள் வந்து பொருந்தினல், அக்குற்றிய

னுகாமானது இகாமாகத் திரிந்து, தன் மாத்திரையிற் குறைந்து ஒலிக்கும். அதற்குக் குற்றியலிகரம் என்பது பெயர்.

(உ - ம்.) பாக்கு+யாது—பாக்கியாது?
பஞ்சு+யாது—பஞ்சியாது?
மார்பு+யாது—மார்பியாது?
வரகு+யாது—வரகியாது?
அஃது+யாது—அஃதியாது?
நாடு+யாது=நாடியாது?

மியா என்பது ஓர் அசைச் சொல். இந்த அசைச் சொல்லில் மி என்பதிலுள்ள இகரம் குற்றியலிகரமாம்.

(உ - ம்.) கேண்மியா, சென்மியா.

குறிப்பு :—குற்றியலிகரம் அல்லாத எல்லாம் முற்றியலிகரமாம். அவை, முற்றியலுகரங்கள் யகர முதல் மொழிகளோடு சேருங்கால் அவ்வுகரம் திரிந்த இகரமும், இயற்கையில் வரும் இகரமுமாம்.

(உ - ம்.) கதவு+யாது=கதவியாது?
கிளி, பிடி.

ந. சூ: 'யகரம் வரக்குறள் உத்திரி இகரமும்
அசைச்சொல் மியாவின் இகரமும் குறிய.'

### ஆய்தம்

8. (ஃ) இங்ஙனம் அடுப்புக் கொம்மைபோல மூன்று புள்ளி வடிவினையுடைய எழுத்திற்கு ஆய்த எழுத்து என்பது பெயர். ஆய்த எழுத்து ஒன்றே. அது குற்றெழுத்துக்கு முன்னும், உயிரோடு சேர்ந்த வல்லெழுத்துக்கள் ஆறன் பின்னும் வரும்.

(உ - ம்.) எஃகு, கஃசு, அஃது, அஃறிணை.

ந. சூ. 'குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே.'

## போலி

9. ஒரு சொல்லில் ஓரெழுத்து நிற்றற்கு உரிய இடத்தில் வேறோர் எழுத்து நின்று, அதே பொருளைத் தந்தால், அதற்குப் போலி என்பது பெயர். [போலி=போல நிற்பது.]

(உ-ம்,) நயம் —ஞயம், நண்டு —ஞண்டு, நாயிறு —ஞாயிறு } மொழிக்கு முதலில் நகரத்திற்கு ஞகரம் போலியாயிற்று.

நீந்தினன்—நீஞ்சினன், மைந்தன் —மைஞ்சன் } மொழிக்கு இடையில் நகரத்திற்கு ஞகரம் போலியாயிற்று.

பலம் —பலன், முகம் —முகன், நலம் —நலன் } மொழிக்கு ஈற்றில் மகரத்திற்கு னகரம் போலியாயிற்று.

பந்தல் —பந்தர், சாம்பல் —சாம்பர் } மொழியின் ஈற்றில் லகரத்திற்கு ரகரம் போலியாயிற்று.

சிறகு —சிறகர், வண்டு —வண்டர் } குற்றியலுகரத்திற்கு 'அர்' போலியாயிற்று.

வைந்து —வைச்சு, பிந்து —பிச்சு } மொழிக்கு இடையிலும் ஈற்றிலும் நகரத்திற்குச் சகரம் போலியாயிற்று.

ஐந்து—அஞ்சு - மொழி முழுவதும் போலியாயிற்று.

### பயிற்சி :

எழுத்தாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? முதல் எழுத்துக்களைக் குறிப்பிடுக. சார்பெழுத்துக்கள் எவை? குற்றிய லுகரமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? பின் வரும் பதங் களிலுள்ள குற்றியலுகரங்களை இன்ன தொடர் எனக் குறிக்க :— எஃகு, பந்து, வண்டு, கச்சு, கட்டு, வாகு, காடு, வீடு, மூழ்கு,

ஈர்க்கு. முற்றியலுகரங்களுக்கு மூன்று உதாரணங்கள் தருக குற்றியலிகரமாவது யாது? இரண்டு உதாரணங்கள் தருக. கீழ் வரும் பதங்களிலுள்ள இகரங்களில் குற்றியலிகரங்கள் இவை என்றும், முற்றியலிகரங்கள் இவையென்றும் வேறு பிரித்துக் காட்டுக:—வீடியாது? சென்மியா, துகிலிகை, பயிர், பயறியாது? அஃதியாது? புதிது. ஆய்தமாவது யாது? ஆய்தம் எவ்விடத்தில் வரும்? போலியாவது யாது? பின் வருவனவற்றில் எவ்வெவற்றிற்கு எவ்வெவை போலியாய் வந்தன? பலன், நீஞ்சினன், அஞ்சு, வண்டர், சாம்பர், ஞயம், ஞாயிறு, வைச்ச.

## சொல்

### பகு பதம்—பகாப் பதம்

**10.** எழுத்துத் தனித்து நின்றாயினும், பல தொடர்ந்தாயினும் பொருள் தரின், சொல் அல்லது பதம் ஆகும். [சொல், பதம், மொழி, கிளவி என்பவை ஒரு பொருட்சொற்கள்.]

(உ-ம்.) ஆ, கா, தீ, பூ—எழுத்துத் தனித்து வந்த பதம்; அதாவது ஓரெழுத்தொருமொழி.

காடு, குளம், உலகம்—பல எழுத்துக்கள் தொடர்ந்து வந்த பதம்; அதாவது பலவெழுத்து மொழி.

**11.** பகாப்பதம், பகு பதம் எனப் பதம் இரு வகைப் படும்.

ந. சூ. 'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம்; அதுபகு பதம்பகாப் பதம்என
இருபா லாகி இயலும் என்ப.'

**12.** பகாப்பதம்:—பகாப்பதமாவது, பகுதி விகுதி முதலியனவாகப் பிரிக்க முடியாததாகிப் பழைய காலந் தொட்டு வழங்கப்பட்டு வரும் பதமாம். அது பெயர்ப்

பகாப்பதம், வினைப் பகாப்பதம், இடைப் பகாப்பதம், உரிப் பகாப்பதம் என நான்கு வகைப்படும்.

(உ-ம்.) தீ, நீர், மரம்—பெயர்ப் பகாப்பதம்.
நட, வா, உண்—வினைப் பகாப்பதம்.
ஏ, மற்று, ஓ, உம்—இடைப் பகாப்பதம்.
நனி, தவ, கடி—உரிப் பகாப்பதம்.

ந. சூ. 'பகுப்பால் பயனற்(று) இடுகுறி யாகி
முன்னே ஒன்ருய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை இடைஉரி நான்கும் பகாப்பதம்.'

13. பகு பதம் :—பகு பதமாவது, பகுதி விகுதி முதலியனவாகப் பிரிக்கக் கூடிய பதமாம். அது பெயர்ப் பகுபதம் வினைப் பகு பதம் என இரு வகைப்படும். இடை உரிப் பகு பதங்கள் இல்லை.

(உ-ம்.) வலைஞன் (வலை + ஞ் + அன்)—பெயர்ப் பகுபதம்.
செய்தான் (செய் + த் + ஆன்)—வினைப் பகுபதம்.

பகு பதத்தின் பிரிவுகளாகிய பகு பத உறுப்புக்கள் :—பகு பதத்தின் உறுப்புக்கள் ஆறும். அவையாவன : பகுதி, விகுதி, இடை நிலை, சாரியை, சந்தி, விகாரம் என்பனவாம்.

14. பகுதியாவது, பகு பதத்தின் முதலில் உள்ள பிரிவு. அதனுல், அது முதனிலை என்றும் சொல்லப்படும். விகுதியாவது, பகு பதத்தின் இறுதியிலுள்ள பிரிவு. அதனுல், அஃது இறுதி நிலை என்றும் சொல்லப்படும். இடை நிலையாவது, பகு பதத்தின் இடையிலுள்ள பிரிவு. சாரியையாவது, பகுதி விகுதிகளைச் சார்ந்து வருவது. சந்தியாவது, பகுதி, விகுதி, இடை நிலை, சாரியை முதலியவைகள் ஒன்ருேடொன்று கூடிப் பகு பதமாகுங்கால் உண்டாகும்

தோன்றல், திரிதல், கெடுதல் முதலிய மாறுபாடுகள் ஆகும். விகாரமாவது, பகு பத உறுப்புக்களில் சில அடையும் வேறுபாடுகளாம். அவை ஆறு வகைப்படும். அவையாவன: வலித்தல் விகாரம், மெலித்தல் விகாரம், நீட்டல் விகாரம், குறுக்கல் விகாரம், விரித்தல் விகாரம், தொகுத்தல் விகாரம் என்பனவாம்.

எல்லாப் பகு பதங்களிலும் இந்த ஆறு உறுப்புக்களும் வர வேண்டிய நியதி இல்லை. பகுதி, விகுதி என்னும் இரண்டு உறுப்புக்கள் அவசியமாக இருக்க வேண்டும்.

| | பகுதி | சந்தி | இடைநிலை | சாரியை | விகுதி |
|---|---|---|---|---|---|
| பிறன் | பிற | — | — | — | ன். |
| செய்தான் | செய் | — | த் | — | ஆன். |
| உண்டனன் | உண் | — | ட் | அன் | அன். |
| படித்தனன் | படி | த் | த் | அன் | அன். |
| கடந்தனன் | கட | த் | த் | அன் | அன். |

சந்தியால் வந்த த், ந் ஆக மாறியது விகாரம்; இது மெலித்தல் விகாரம்.

ந. சூ. 'பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.'

பயிற்சி:

பதமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? பகாப்பதமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? உதாரணங்கள் தருக. பகு பதமாவது யாது? பகு பத உறுப்புக்கள் யாவை? பகுதியாவது யாது? விகுதியாவது யாது? இடைநிலையாவது யாது? சந்தியாவது யாது? சாரியையாவது யாது? விகாரமாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? அவை எவை? செய்தனன், உண்டான், படித்தான், புகுந்தனன்—இப்பகுபதங்களைப் பிரித்துக் காட்டுக.

## பெயர்ச் சொல்

### இடுகுறி காரணப் பெயர்கள்

**15.** பெயர்ச் சொற்கள் இடுகுறிப் பெயர், காரணப் பெயர் என இரு வகையாகப் பிரிக்கப்படும்.

**16.** இடுகுறிப் பெயர்:—அறிவுடையவரால் ஒரு பொருளுக்கு யாதொரு காரணமும் இல்லாமல் இடப்பட்ட குறியாகிய பெயர் இடுகுறிப் பெயராம்.

(உ - ம்.) மண், கல், புத்தகம்.

**17.** காரணப் பெயர்:—ஏதாவது ஒரு காரணம் பற்றி ஒரு பொருளுக்கு இடப்பட்ட பெயர் காரணப் பெயராம்.

(உ-ம்.) முக்காலி — மூன்று கால்களை உடைமையால் இதற்கு முக்காலி எனப் பெயர் வந்தது.

சிலம்பு—சிலம்புகின்ற அதாவது ஒலிக்கின்ற காரணம் பற்றி இதற்குச் சிலம்பு எனப் பெயர் வந்தது.

மண் வெட்டி—மண்ணை வெட்டி எடுப்பதனால் இதற்கு மண் வெட்டி எனப் பெயர் வந்தது.

### பால்

**18.** பெயர்ச் சொற்களில் பாலை அறிவிக்கப் பால் காட்டும் விகுதிகள் அவற்றின் ஈற்றில் சேர்ந்து வரும்.

**19.** ஆண் பால்:—ஆண் பாலைக் காட்டும் விகுதிகளாவன, அன், ஆன், மன், மான், ன் என்பன.

| (உ - ம்.) | | விகுதி. |
|---|---|---|
| அரசன் | — | அன் |
| மதுரையான் | — | ஆன் |
| வடமன் | — | மன் |
| சீமான் | — | மான் |
| மகன் | — | ன் |

20. பெண் பால்:—பெண் பாலைக் காட்டும் விகுதிகளாவன, அள், ஆள், ள், இ என்பன.

(உ - ம்.) விகுதி

| | | |
|---|---|---|
| நல்லள் | — | அள் |
| குழையாள் | — | ஆள் |
| மகள் | — | ள் |
| கிழவி | — | இ |

21. ஆண் பாலில் அன் என முடிகிற சில பெயர்கள், பெண் பாலில் அள் என முடியும்.

| (உ - ம்.) ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| அவன் | — | அவள் |
| இவன் | — | இவள் |
| எவன் | — | எவள் |
| யாவன் | — | யாவள் |
| மற்றவன் | — | மற்றவள் |
| நல்லவன் | — | நல்லவள் |
| சென்றவன் | — | சென்றவள் |

22. ஆண் பாலில் அன் என முடிகிற வேறு சில பெயர்கள், பெண் பாலில் இ என முடியும்.

| (உ - ம்.) ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| அரசன் | — | அரசி |
| தலைவன் | — | தலைவி |
| கிழவன் | — | கிழவி |
| பார்ப்பனன் | — | பார்ப்பனி |
| எஜமானன் | — | எஜமானி |
| பாட்டன் | — | பாட்டி |
| புத்திரன் | — | புத்திரி |
| குருடன் | — | குருடி |
| பாதகன் | — | பாதகி |
| சுந்தரன் | — | சுந்தரி |

23. சாதிப் பெயர்களில் அன் என ஆண் பாலில் முடியும் சில பெயர்கள் பெண் பாலில் ச்சி என்றுவது, த்தி என்றுவது முடியும்.

| (உ-ம்.) ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| இடையன் | — | இடைச்சி |
| பறையன் | — | பறைச்சி |
| வலையன் | — | வலைச்சி |
| வாணியன் | — | வாணிச்சி |
| வேட்டுவன் | — | வேட்டுவச்சி |
| தெலுங்கன் | — | தெலுங்கச்சி |

இவை ச்சி பெற்று முடிந்தன.

| | | |
|---|---|---|
| குயவன் | — | குயத்தி |
| குறவன் | — | குறத்தி |
| உழவன் | — | உழத்தி |
| மறவன் | — | மறத்தி |

இவை த்தி பெற்று முடிந்தன.

24. ஆண் பாலில் ஆன் என முடிந்துள்ள சில பெயர்கள் பெண் பாலில் ஆள் என முடியும்.

| (உ-ம்.) ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| குழையான் | — | குழையாள் |
| ஊரான் | — | ஊராள் |
| குலத்தான் | — | குலத்தாள் |
| வமிசத்தான் | — | வமிசத்தாள் |
| வானத்தான் | — | வானத்தாள் |

25. ஆண் பாலில் ஆன் என முடியும் சாதிப் பெயர்களில் சில, பெண் பாலில் ஆத்தி என முடியும்.

| (உ-ம்.) ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| வண்ணான் | — | வண்ணாத்தி |
| தட்டான் | — | தட்டாத்தி |
| கன்னான் | — | கன்னாத்தி |

26. ஆண் பாலில் வான் என முடியும் சில பெயர்கள்' பெண் பாலில் வதி என முடியும்.

(உ - ம்.) ஆண் பால் — பெண் பால்

| ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| குணவான் | — | குணவதி |
| பாக்கியவான் | — | பாக்கியவதி |
| புண்ணியவான் | — | புண்ணியவதி |
| தனவான் | — | தனவதி |

27. ஆண் பாலில் காரன் என முடியும் சில பெயர்கள் பெண் பாலில் காரி என முடியும்.

(உ - ம்.)

| ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| பணக்காரன் | — | பணக்காரி |
| வேலைக்காரன் | — | வேலைக்காரி |
| கூலிக்காரன் | — | கூலிக்காரி |
| கெட்டிக்காரன் | — | கெட்டிக்காரி |

28. சில பெயர்கள் ஆண் பாலில் வேறாகவும் பெண் பாலில் வேறாகவும் வரும்.

(உ - ம்.)

| ஆண் பால் | | பெண் பால் |
|---|---|---|
| புருஷன் | — | ஸ்திரீ |
| கணவன் | — | மனைவி |
| அண்ணன் | — | அக்காள் |
| தந்தை | — | தாய் |
| பிதா | — | மாதா |
| தம்பி | — | தங்கை |
| நம்பி | — | நங்கை |

29. சில சொற்கள் ஆண் பாலுக்கு மட்டும் உரியனவாய் இருக்கும்.

(உ - ம்.) விடலை; கோ, வேள், குரிசில், தோன்றல், செம்மல்.

30. சில சொற்கள் பெண் பாலுக்கு மட்டும் உரியன வாக இருக்கும்.

(உ - ம்.) செவிலி, தையல், மாது.

31. சில பெயர்கள் ஆண் பால், பெண் பால் இரண் டிற்கும் பொதுவாய் வரும்.

(உ - ம்.)

| | |
|---|---|
| அவன்<br>அவள் | குணசாலி, புத்திசாலி, அதிருஷ்ட சாலி, தைரியசாலி, பலசாலி, புண்ணிய சாலி. |
| அவன்<br>அவள் | நோயாளி, குற்றவாளி. |
| அவன்<br>அவள் | ஞானி, பாவி. |

32. பலர் பால்:—பலர் பாலைக் காட்டும் விகுதிகளாவன, அர், ஆர், மார், ர், கள் என்பன.

(உ - ம்.)

| | விகுதி |
|---|---|
| மாதர் | — அர் |
| பெரியார் | — ஆர் |
| தேவிமார் | — மார் |
| பிறர் | — ர் |
| பெண்கள் | — கள் |

குறிப்பு:—கள் என்பது விகுதிமேல் விகுதியாகவும் வரும்.

(உ - ம்.) மாதர்கள், தேவிமார்கள், பெரியார்கள்.

பலர்பாற்பெயர்களில் குழந்தைகள், ஜனங்கள், மக்கள்போன் றவை ஆண் பால் பெண் பால்களுக்குப் பொதுவாய் வரும்; மைந்தர் என்பது ஆண் பாலுக்கே உரித்தானது.

33. ஒன்றன் பால் :—ஒன்றன் பாலைக் காட்டும் விகுதி து ஒன்றே.

(உ - ம்.) விகுதி

| | |
|---|---|
| அது<br>பெரிது<br>வாலது | து |

34. பலவின் பால்:—பலவின் பாலைக் காட்டும் விகுதிகளாவன, அ, வை, கள் என்பன.

(உ - ம்.) விகுதி

| | | |
|---|---|---|
| சிறியன | — | அ |
| சிறியவை | — | வை |
| மரங்கள் | — | கள் |

குறிப்பு :—கள் என்பது விகுதிமேல் விகுதியாகவும் வரும். (உ - ம்.) சிறியவைகள், பெரியவைகள்.

ஒன்றன்பால் பலவின்பால் பொருள்களுள் மிருகம், பறவை போன்ற சிலவற்றில் உள்ள ஆண் பெண் வித்தியாசங்களைக் குறிக்க வேறு வேறு பெயர்கள் வருவதுண்டு.

(உ - ம்.)

| ஆண் | | பெண் |
|---|---|---|
| கடா | — | மறி |
| களிறு | — | பிடி |
| சேவல் | — | பெடை |

35. பால்காட்டும் விகுதிகளுள் இகரவிகுதி உயர்திணை ஆண் பால் பெண் பால்களிலும், அஃறிணை ஒன்றன் பாலிலும் வரும்.

(உ - ம்.) வில்லி — ஆண் பால்
கிழவி — பெண் பால்
முக்காலி — ஒன்றன் பால்

36. சில பெயர்களின் ஈற்றிலுள்ள ஆன் விகுதி ஓன் எனவும், ஆர் விகுதி ஓர் எனவும் திரிந்து வரும்.

(உ - ம்.) பெரியான் — பெரியோன்
சிறியான் — சிறியோன்
நல்லார் — நல்லோர்.
தீயார் — தீயோர்
பெரியார் — பெரியோர்

37. சில உயர்திணைச் சொற்களில் அர், ஆர் ஆகிய விகுதிகள் பலர் பாலைக் குறிக்காமல் மரியாதையைக் காட்ட வரும்.

(உ - ம்.) அவர், இவர், தாயார், தந்தையார், நந்தனார், முதலியார், ஔவையார், இராணியார்.

குறிப்பு:—விகுதிமேல் விகுதியாக வரும் கள் என்பதும் பேச்சு வழக்கில் அவ்வாறு வரும்.

(உ - ம்.) அவர்கள் சென்றார்கள்.
இவர்கள் நல்லவர்கள்.
முதலியார் அவர்களே, வாருங்கள்.

38. ஒருவர் என்னும் சொல், உயர்திணை ஆண் பால் பெண் பால்களுக்குப் பொதுவாய் வந்து, பலர் பால் வினையைக் கொண்டு முடியும்.

(உ - ம்.) ஆண்களுள் ஒருவர் வந்தார்.
பெண்களுள் ஒருவர் சென்றார்.

39. து, அ, வை, கள் முதலிய ஒன்றன் பால் பலவின் பால் விகுதிகளைப் பெறாத அஃறிணைப் பெயர்கள், அத்திணைக்குரிய அவ்விரு பால்களுக்கும் பொதுவாய் வருவனவாம். அவை பால் பகா அஃறிணைப் பெயர் எனப்படும்.

(உ - ம்.) பூனை வந்தது —பூனை வந்தன.
மரம் வளர்ந்தது —மரம் வளர்ந்தன.
பறவை பறந்தது —பறவை பறந்தன.

பயிற்சி:

ஐந்து பால்களுக்கும் உரிய விகுதிகளைக் குறிப்பிடுக. ஆண் பாலில் அன் என முடியும் பெயர்கள் பெண் பாலில் எவ்வாறு முடியும்? ஆண் பாலில் **வான்** என முடியும் பெயர்கள் பெண் பாலில் எவ்வாறு முடியும்? ஆண் பாலில் **காரன்** என முடியும் பெயர்கள் பெண் பாலில் எவ்வாறு முடியும்? ஆண் பாலில் வேறாகவும் பெண் பாலில் வேறாகவும் வரும் பெயர்களைக் குறிப்பிடுக. ஆண் பால் பெண் பால்களுக்குப் பொதுவாய் வரும் பெயர்களைக் குறிப்பிடுக. இகர விகுதி எந்தெந்தப் பால்களில் வரும்? உதாரணங்கள் தருக. பால் காட்டும் விகுதிகளுள் திரிந்து வருவன யாவை? உதாரணங்கள் தருக. பால் பகா அஃறிணைப் பெயராவது யாது? உதாரணங்கள் தருக.

## ஆகு பெயர்

**40.** ஆகுபெயராவது, பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில், அளவை, கருத்தா முதலியவற்றுள் ஒன்றின் பெயரால் அதனோடு சம்பந்தமுடைய மற்றொன்றுக்குத் தொன்றுதொட்டு வழங்கப்பட்டு வரும் பெயராம்.

இவற்றுள் அளவை எண்ணலளவை, எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை என நான்கு வகைப்படும்.

**41.** இதனால் ஆகுபெயர் பொருளாகுபெயர், இடவாகுபெயர், காலவாகுபெயர், சினையாகுபெயர், குணவாகுபெயர், தொழிலாகுபெயர், எண்ணலளவை ஆகு பெயர், எடுத்தல் அளவை ஆகு பெயர், முகத்தலளவை ஆகு பெயர், நீட்டல் அளவை ஆகுபெயர், கருத்தாவாகுபெயர் எனப் பல வகைப்படும்.

இவற்றுள் பொருளாகு பெயர் முதலாகு பெயர் என்றும், இடவாகு பெயர் தானவாகு பெயர் என்றும், குணவாகு பெயர் பண்பாகு பெயர் என்றும் சொல்லப்படும்.

[இடம்=தானம். குணம்=பண்பு. பொருள் என்பது இங்கு முதற்பொருளைக் குறிப்பதால், பொருளாகு பெயர் முதலாகு பெயர் எனப்பட்டது.]

1. பொருளாகு பெயர் அல்லது முதலாகு பெயர்:—ஒரு முதற்பொருளினது பெயர், அப்பொருளுக்குச் சம்பந்தமுடைய சினைப் பொருளுக்கு வழங்குவது பொருளாகு பெயர் அல்லது முதலாகு பெயராம்.

(உ-ம்.) தாமரை போன்ற பாதம்.

இதில் தாமரை என்னும் முதற்பொருளாகிய கொடியின் பெயர், அதன் சினையாகிய பூவிற்கு ஆயிற்று.

2. இடவாகு பெயர் அல்லது தானவாகு பெயர்:—ஓர் இடத்தின் பெயர், அவ்விடத்திலுள்ள பொருளுக்கு வழங்குவது இடவாகு பெயர் அல்லது தானவாகு பெயராம்.

(உ-ம்.) ஊர் கூடிற்று.

இதில் ஊர் என்னும் இடப்பெயர், அவ்விடத்திலுள்ள ஜனங்களைக் குறித்தது.

3. காலவாகு பெயர்:—ஒரு காலப்பெயர், அக்காலத்தோடு சம்பந்தமுடைய மற்றொரு பொருளுக்குப் பெயராகி வருவது காலவாகு பெயராம்.

(உ-ம்.) கார் அறுத்தது.

இதில் கார் என்னும் காலத்தின் பெயர், அக்காலத்தில் விளையும் நெற்பயிருக்கு ஆயிற்று.

4. சினையாகு பெயர்:—ஒரு சினைப் பெயர், அதனை உடைய முதற்பொருளுக்குப் பெயராக வழங்குவது சினையாகு பெயராம்.

(உ-ம்.) வெற்றிலை நட்டான்.

இதில் வெற்றிலை என்னும் சினைப் பெயர், அவ்விலையை உடைய முதற்பொருளாகிய கொடிக்கு ஆயிற்று.

5. குணவாகு பெயர் அல்லது பண்பாகு பெயர் :—ஒரு குணத்தின் பெயர், அக்குணத்தைக் கொண்ட பொருளுக்கு ஆகி வருவது குணவாகு பெயர் அல்லது பண்பாகு பெயராம்.

(உ - ம்.) சிவப்பு உடுத்தான்.

இதில் சிவப்பு என்னும் நிறக்குணத்தின் பெயர், அக்குணத்தையுடைய வஸ்திரத்திற்கு ஆயிற்று.

6. தொழிலாகு பெயர் :—ஒரு தொழிலின் பெயர், அத்தொழிலினைக் கொண்ட பொருளுக்குப் பெயராகி வழங்குவது தொழிலாகு பெயராம்.

(உ - ம்.) வற்றல் உண்டான்.

இதில் வற்றல் என்னும் தொழிலின் பெயர், அத்தொழிலினைக் கொண்ட ஓர் உணவுப் பொருளுக்காயிற்று.

7. எண்ணலளவை ஆகு பெயர் :—ஓர் எண்ணலளவைப் பெயர், அவ்வளவினைக் கொண்ட பொருளுக்குப் பெயராகி வழங்குவது எண்ணலளவை ஆகு பெயராம்.

(உ - ம்.) கால் சறுக்கினது.

இதில் கால் என்னும் எண்ணலளவைப் பெயர், அவ்வளவையினைக் கொண்ட உறுப்பிற்குப் பெயராயிற்று.

8. எடுத்தலளவை ஆகுபெயர் :—ஓர் எடுத்தலளவைப் பெயர், அவ்வளவையினைக் கொண்ட பொருளுக்குப் பெயராகி வழங்குவது எடுத்தலளவை ஆகு பெயராம்.

(உ - ம்.) ஒரு வீசை கொடு.

இதில் வீசை என்னும் எடுத்தலளவைப் பெயர், அவ்வளவையினைக் கொண்ட பொருளுக்காயிற்று.

9. முகத்தலளவை ஆகு பெயர் :—ஒரு முகத்தலளவைப் பெயர், அவ்வளவினைக் கொண்ட பொருளுக்குப் பெயராகி வருவது முகத்தலளவை ஆகு பெயராம்.

(உ - ம்.) ஒரு படி வாங்கு.

இதில் படி என்னும் முகத்தலளவைப் பெயர், அவ்வளவினைக் கொண்ட பொருளுக்குப் பெயராயிற்று.

**10.** நீட்டலளவையாகு பெயர் :—ஒரு நீட்டலளவைப் பெயர், அவ்வளவையினைக் கொண்ட பொருளுக்குப் பெயராகி வழங்குவது நீட்டலளவை ஆகு பெயராம்.

(உ - ம்.) ஐந்து கஜம் வாங்கு.

இதில் கஜம் என்னும் நீட்டலளவைப் பெயர், அவ்வளவையினைக் கொண்ட துணிக்குப் பெயராயிற்று.

**11.** கருத்தா ஆகு பெயர் :—ஒரு கருத்தாவின் பெயர், அக்கருத்தாவினலான காரியத்திற்குப் பெயராகி வழங்குவது கருத்தா ஆகு பெயராம்.

(உ - ம்.) திருவள்ளுவர் படித்தான்.

இதில் திருவள்ளுவர் என்னும் கருத்தாவின் பெயர், அவராலியற்றப்பட்ட நூலுக்குப் பெயராயிற்று.

பயிற்சி :

காரணப் பெயராவது யாது? உதாரணம் தருக. இடுகுறிப்பெயராவது யாது? உதாரணம் தருக. ஆகுபெயராவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? அவை எவை? பொருளாகு பெயர், தானவாகு பெயர், தொழிலாகு பெயர், சினையாகு பெயர், எடுத்தலளவையாகுபெயர், கருத்தாவாகுபெயர் இவற்றை விளக்கி உதாரணங்கள் தருக. பின் வரும் உதாரணங்களிலுள்ள ஆகுபெயர் இன்ன வகையைச் சேர்ந்தன என்பதைக் காரணத்தோடு குறிக்க :—வற்றல் உண்டான், படி உடைந்தது, திருவள்ளுவர் கற்றான், ஊர் கூடிற்று, கார் அறுத்தது, சிவப்பு உடுத்தான், கால் சறுக்கினது.

## வேற்றுமை

42. பெயரின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமையாம். பெயர்ச்சொற்களின் ஈற்றில் சில சொற்கள் நின்று அவற்றின் பொருளை வேறுபடுத்தும். அவை வேற்றுமை உருபுகள் எனப்படும்.

43. வேற்றுமை எட்டு வகைப்படும். அவை முறையே முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை என்பனவாம்.

ந. சூ. 'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.'

1. முதல் வேற்றுமை:—திரிபில்லாத பெயரே முதல் வேற்றுமை உருபாம். இவ்வேற்றுமையின் பொருள் கருத்தாப் பொருள். இது வினையையும், பெயரையும், வினாவையும் பயனிலையாகக் கொண்டு முடியும். இஃது எழுவாய் வேற்றுமை என்றும் சொல்லப்படும். [எழுவாய் = முதல்.]

| (உ - ம்.) | முகுந்தன் படித்தான். | — | வினைப்பயனிலை |
|---|---|---|---|
| | இராமன் இவன். | — | பெயர்ப்பயனிலை |
| | கந்தன் யார்? | — | வினாப்பயனிலை |

இவற்றுள் முதல் வேற்றுமையை ஏற்றனவாகிய முகுந்தன், இராமன், கந்தன் என்னும் பெயர்கள், யாதொரு திரிபுமில்லாதனவாய்க் கருத்தாப் பொருளில் வந்தமை காண்க.

இன்னும் இவை முறையே படித்தான், இவன், யார் என்னும் வினை, பெயர், வினா ஆகிய பயனிலைகளைப் பெற்று வந்தமையும் அறிக.

குறிப்பு :—இவ்வேற்றுமைக்கு, ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்றவன், என்கின்றவன், என்பவன், என்பான் முதலாகிய ஐம்பாற்சொற்களும் சொல்லுருபுகளாக வரும்.

(உ - ம்.) முருகனானவன் }
முருகனாகின்றவன் } வந்தான்
முருகனாவான் }
இராமனென்றவன் }
இராமனென்கின்றவன் }
இராமனென்பவன் } சென்றான்
இராமனென்பான் }

இவற்றுள் சொல்லுருபுகள் வந்தன.

ந. சூ. 'எழுவாய் உருபு திரிபில் பெயரே;
வினைபெயர் வினுக்கோளல் அதன்பய னிலையே.'

2. இரண்டாம் வேற்றுமை:— இதன் உருபு ஐ என்பது. இதன் பொருள் செயப்படுபொருள். செயப்படுபொருளாவது, கருத்தாவால் செய்யப்படும் தொழிலை எற்கும் பொருள். அஃது ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒப்பாதல், உடைமை முதலியனவாகப் பல வகைப்படும்.

(உ - ம்.) பானையை வனைந்தான் —ஆக்கப்படு பொருள்
வீட்டை இடித்தான் —அழிக்கப்படு பொருள்
நாட்டை அடைந்தான் —அடையப்படு பொருள்
மனைவியைத் துறந்தான்—நீக்கப்படு பொருள்
சிங்கத்தைப் போன்றான்—ஒப்புமைப்படு பொருள்
பொன்னை உடையான் —உடைமைப் பொருள்

ந. சூ. 'இரண்டா வதன்உரு(பு) ஐயே: அதன்பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி யாகும்.'

3\. மூன்றும் வேற்றுமை:— இதன் உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு என்பன. கொண்டு, உடன் என்பவை இதற்குச் சொல்லுருபுகளாக வரும். இச்சொல்லுருபுகளுள் கொண்டு என்பது ஆல், ஆன் என்னும் உருபுகளுக்குப் பதிலாகவும், உடன் என்பது ஓடு, ஒடு என்பவற்றிற்குப் பதிலாகவும் வரும்.

இதன் பொருள் கருவிப் பொருள், கருத்தாப் பொருள், உடனிகழ்ச்சிப் பொருள் என்னும் மூன்றுமாம். மேற்கூறிய உருபுகளுள் ஆல், ஆன் ஆகிய இரண்டும் கருவி, கருத்தாப் பொருள்களிலும், ஒடு, ஓடு ஆகிய இரண்டும் உடனிகழ்ச்சிப் பொருளிலும் வரும்.

(1) கருவிப்பொருளாவது, கருத்தா செய்யும் தொழிலுக்குச் சாதனமாயிருப்பதாம். [கருவி=காரணம்.] கருவி முதற்கருவி, துணைக்கருவி என இரு வகைப்படும்.

முதற்கருவியாவது, காரியம் உண்டாவதற்கு இன்றியமையாததாய்ப் பின் காரியப் பொருளாகவே மாறும் தன்மையுடைய பொருளாம்.

(உ - ம்.) பொன்னால் வளையல் செய்யப்பட்டது.

இதில் பொன் முதற்கருவி. இது வளையல் செய்வதற்கு இன்றியமையாததாய்ப் பின் வளையலாகிய காரியப்பொருளாக மாறியது காண்க.

துணைக்கருவியாவது, தொழில் செய்து முடிகிற வரையில் உதவியாக இருந்து, பின் நீங்கும் பொருளாம்.

(உ - ம்.) இராட்டினத்தால் நூல் நூற்கப்பட்டது.

இதில் இராட்டினம் துணைக்கருவி. இது நூல் நூற்பதாகிய தொழில் செய்து முடிகிற வரையில் உதவியாயிருந்து, பின் நீங்குவது காண்க.

(2) கருத்தாப் பொருளாவது, தொழிலைச் செய்பவனை உணர்த்தும் பொருள். கருத்தா இயற்றுதற்கருத்தா, ஏவுதற் கருத்தா என இரு வகைப்படும்.

இயற்றுதற்கருத்தாவாவது, ஒரு தொழிலைத் தானே செய்யும் கருத்தாவாம்.

(உ - ம்.) தூயவனால் பானை வனையப்பட்டது.

இதில் தூயவன் இயற்றுதற்கருத்தா. வனைதலாகிய தொழிலை அவன் தானே செய்தது காண்க.

ஏவுதற்கருத்தாவாவது, இயற்றுதற்கருத்தாவைக்கொண்டு தொழிலை உண்டாக்கும் கருத்தாவாம்.

(உ - ம்.) அரசனால் கோயில் கட்டப்பட்டது.

இதில் அரசன் ஏவுதற்கருத்தா. இங்கு அவன் இயற்றுதற் கருத்தாவாகிய தச்சன் முதலாயினோரைக் கொண்டு தொழிலை உண்டாக்குவது காண்க.

குறிப்பு:—முதல் வேற்றுமைக் கருத்தாவிற்கும் மூன்றும் வேற்றுமைக் கருத்தாவிற்கும் உள்ள வேறுபாடு:—

(i) முதல் வேற்றுமைக் கருத்தா செய்வினையால் முடியும்; மூன்றும் வேற்றுமைக் கருத்தா செயப்பாட்டு வினையால் முடியும்.

(ii) முதல் வேற்றுமைக் கருத்தாவானால் செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமையை ஏற்று வரும்; மூன்றும் வேற்றுமைக் கருத்தாவானால் செயப்படுபொருள் முதல் வேற்றுமையை ஏற்று வரும்.

(3) உடனிகழ்ச்சிப் பொருளாவது, வினைகொண்டு முடியும் கருத்தாவினது தொழிலைத் தன்னிடத்தும் உடன் நிகழ்வதைக் கொண்டுள்ள பொருளாம்.

(உ - ம்.) மகனோடு தந்தையார் வந்தார்.

இதில் மகன் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. இங்குத் 'தந்தையார்' வினை கொண்டு முடியும் கருத்தா. அக்கருத்தாவினது தொழில் மகனிடத்தும் உடன் நிகழ்வதைக் காண்க.

(உ - ம்.)

| உருபுகள் வந்தன. | சொல்லுருபுகள் வந்தன. |
|---|---|
| வாளால் வெட்டினான்<br>வாளான் வெட்டினான் | வாள்கொண்டு வெட்டினான். |
| தந்தையோடு வந்தான்<br>தந்தையொடு வந்தான் | தந்தையுடன் வந்தான். |

ந. சூ. 'மூன்று வதனுரு(பு) ஆல்ஆன் ஓ(டு)ஒடு
கருவி கருத்தா உடனிகழ்(வு) அதன்பொருள்.'

4. நான்காம் வேற்றுமை :—இதன் உருபு கு என்பது. இதன்மேல் சில சமயங்களில் ஆக என்பது சேர்ந்தும் வரும். பொருட்டு, நிமித்தம் என்பவை இதன் சொல்லுருபுகள்.

இதன் பொருள் கொடை, பகை, நேர்ச்சி, தகவு, அதுவாதல், பொருட்டு, முறை முதலானவை தோன்ற இதற்கு இது என்பது பட வருதலாம். [நேர்ச்சி=நட்பு; தகவு=தகுதி; அதுவாதல்=முதற்காரண காரியம்=முதற்காரணத்தால் ஆகும் பொருள்; பொருட்டு=நிமித்தகாரண காரியம்=துணைக்காரணத்தால் ஆகும் பொருள்.]

(உ - ம்.)

புலவர்க்குப் பொருள் கொடுத்தான்—கொடைப்பொருள்
எலிக்குப் பகை பூனை—பகை தொடர் பொருள்
கபிலர்க்கு நண்பர் பரணர்—நட்புத் தொடர்பொருள்
அரசனுக்கு உரியது மகுடம்—தகுதியுடைப்பொருள்
காப்பிற்குப் பொன் வாங்கினான்—முதற்காரண காரியப்பொருள்
கூலிக்கு வேலை செய்தான்—நிமித்த காரண காரியப்பொருள்
தசரதனுக்கு மகன் இராமன்—முறைக்கு இயை பொருள்

குறிப்பு :—நான்காம் வேற்றுமைக்குரிய குவ்வுருபு சில சமயங்களில் எல்லைப் பொருளிலும் வரும்.

(உ - ம்.) சென்னைக்குத் தெற்கு நாகை.

இதனுள் உருபு வந்தது.

கூலிக்காக வேலை செய்தான்.

இதில் குவ்வுருபின்மேல் ஆக என்பது சேர்ந்து வந்தது.

கூலியின்பொருட்டு வேலை செய்தான்.

கூலியின்நிமித்தம் வேலை செய்தான்.

இவற்றுள் சொல்லுருபுகள் வந்தன.

ங. சூ. 'நான்கா வஃதற்குரு(பு) ஆகும் குவ்வே ;
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை ஆதியின் இதற்கிதெனல் பொருளே.'

5. ஐந்தாம் வேற்றுமை:-இதன் உருபுகள் இன், இல் என்பன. இவற்றுள் இன் உருபோடு நின்று, நின்றும் என்பவைகளும், இல் உருபோடு இருந்து, இருந்தும் என்பவைகளும் சேர்ந்தும் வருவதுண்டு. இதன் பொருள் நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது என்பன.

(உ - ம்.) ஊரில் நீங்கினான்—நீங்கற்பொருள்
பாலின் வெளிது கொக்கு—ஒப்புப்பொருள்
சென்னையின் தெற்கு நாகை—எல்லைப்பொருள்
தவத்தில் உயர்ந்தவர் இருடிகள்—ஏதுப்பொருள்

குறிப்பு :—ஒப்புப் பொருள் உவமப்பொருவு, உறழ் பொருவு என இரு வகைப்படும். [பொருவு=ஒப்புமை.]

(உ - ம்.) காக்கையிற் கரியது களம்பழம்.

இதற்குக் - காக்கையைப்போன்ற கரிய நிறமுள்ளது களம்பழம் எனப் பொருள் கொள்ளின், உவமப்பொருவாம்; காக்கையைக்காட்டிலும் கரிய நிறமுள்ளது களம்பழம் எனப் பொருள் கொள்ளின் உறழ் பொருவாம்.

இவற்றுள் உருபுகள் தனித்து வந்தன.

ஊரினின்று நீங்கினன்.
ஊரினின்றும் நீங்கினன்.

இவற்றுள் இன் உருபோடு நின்று, நின்றும் என்பவை சேர்ந்து வந்தன.

சென்னையிலிருந்து சென்றான்.
சென்னையிலிருந்தும் சென்றான்.

இவற்றுள் இல் உருபோடு இருந்து, இருந்தும் என்பவை சேர்ந்து வந்தன.

ந. சூ. 'ஐந்தா வதன்உரு(பு) இன்னும் இல்லும்
நீங்கல்ஒப்(பு) எல்லை ஏதுப் பொருளே.'

6. ஆறும் வேற்றுமை :—இதன் உருபுகள் அது, ஆது, அ என்பன. இவற்றுள் அது, ஆது என்பவை வருமொழி ஒருமைக்கும், அ என்பது வருமொழிப் பன்மைக்கும் வரும். உடைய என்பது இதன் சொல்லுருபு. இதன் பொருள் கிழமைப் பொருள். கிழமை தற்கிழமை, பிறிதின் கிழமை என இரு வகைப்படும்.

தற்கிழமையாவது, தன்னின் வேறாகப் பிரிக்க முடியாத தன்மை வாய்ந்தது ; பிறிதின் கிழமையாவது, தன்னின் வேறாகப் பிரிக்கக் கூடிய தன்மை வாய்ந்தது.

தற்கிழமை பண்பு, உறுப்பு, ஒன்றன் கூட்டம், பலவின் ஈட்டம், திரிபின் ஆக்கம் என்னும் ஐந்தையும்பற்றி வரும் ; இவற்றுள் பண்பு, குணப்பண்பு, தொழிற்பண்பு என இரு வகைப்படும்.

பிறிதின் கிழமை, பொருள், இடம், காலம் என்னும் மூன்றையும் பற்றி வரும்.

(உ - ம்.) தற்கிழமை

| | | |
|---|---|---|
| தேனினது இனிமை | — | குணப்பண்பு |
| முருகனது வருகை | — | தொழிற்பண்பு |
| குதிரையினது கால் | — | உறுப்பு |
| மனிதரது கூட்டம் | — | ஒன்றன் கூட்டம் |
| சேனைகளது தொகுதி | — | பலவின் ஈட்டம் |
| சோளத்தினது பொரி | — | திரிபின் ஆக்கம் |

பிறிதின் கிழமை

| | | |
|---|---|---|
| இராமனது புத்தகம் | — | பொருள் |
| இராமனது நிலம் | — | இடம் |
| இராமனது நாள் | — | காலம் |
| தனது தலை | — | ஆது உருபு |
| தன கைகள் | — | அ உருபு |
| தன்னுடைய வீடு | — | சொல்லுருபு |

ந. சூ. 'ஆறன் ஒருமைக்(கு) அதுவும், ஆதுவும்
பன்மைக்(கு) அவ்வும் உருபாம்; பண்புறுப்(பு)
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.'

7. ஏழாம் வேற்றுமை:—இதன் உருபு கண் முதலிய வைகளாம். அவையாவன: கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல், பின், பாடு, அளை, தேம், உழை, வழி, உழி, உளி, உள், அகம், புறம், இல் என்பன வாம்.

இதன் பொருளாவது, பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறையும், தற்கிழமை,

பிறிதின் கிழமை என்னும் இரு கிழமைப்பொருட்கும் இடமாக்க வருவதாம்.

(உ - ம்.)

| | | |
|---|---|---|
| மணியின்கண் ஒளி உள்ளது. | —தற்கிழமை | பொருள் இடமாயிற்று. |
| மரத்தின்கண் காகம் உள்ளது. | —பிறிதின்கிழமை | |
| ஊரின்கண் வீடு உள்ளது. | —தற்கிழமை | இடம் இடமாயிற்று. |
| ஆகாயத்தின்கண் பருந்து பறக்கிறது. | —பிறிதின் கிழமை | |
| நாழிகையின்கண் வினடிகள் உள்ளன. | —தற்கிழமை | காலம் இடமாயிற்று. |
| அந்தியின்கண் அந்தி மந்தாரை பூத்தது. | —பிறிதின் கிழமை | |
| காலில் விரல்கள் உள்ளன. | —தற்கிழமை | சினை இடமாயிற்று. |
| விரலில் மோதிரம் உள்ளது. | —பிறிதின் கிழமை | |
| கறுப்பின்கண் அழகு உள்ளது | —தற்கிழமை | குணம் இடமாயிற்று. |
| இளமையின்கண் செல்வம் வாய்த்தது. | —பிறிதின் கிழமை | |
| ஆட்டத்தின்கண் அபிநயம் செய்தாள். | —தற்கிழமை | தொழில் இடமாயிற்று. |
| ஆட்டத்தின்கண் பாட்டுப் பாடினாள். | —பிறிதின் கிழமை | |

ந. சூ. 'ஏழன் உருபு கண்ஆதி ஆகும்;
பொருள்முதல் ஆறும் ஓர்இரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொருள் என்ப.'

ந. சூ. 'கண்கால் கடைஇடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலம்இடம் மேல்கீழ் புடைமுதல்
பின்பா(டு) அளைதேம் உழைவழி உழிஉளி
உள்அகம் புறம்இல் இடப்பொருள் உருபே.'

8. எட்டாம் வேற்றுமை:--இதற்குத் தனியான உருபுகள் இல்லை. இவ்வேற்றுமையை ஏற்கும் பெயர்கள் ஈற்றில் சில விகாரங்களை அடையும். அவ்விகாரங்களே இதன் உருபுகளாம். அவையாவன, ஈறு திரிதல், ஈறு குன்றல், ஈறு மிகுதல், இயல்பாதல், ஈற்றயல் திரிதல் ஆகியவைகளாம்.

இதன் பொருள் படர்க்கையோரைத் தன் முகமாகத் தான் அழைத்தல்; அதாவது, விளித்தலாம். [விளித்தல்= அழைத்தல்.]

சமீபத்தில் உள்ளவரை விளித்தல் அண்மை விளி என்றும், தூரத்தில் உள்ளவரை விளித்தல் சேய்மை விளி என்றும், புலம்புதலில் விளித்தல் புலம்பல் விளி என்றும் சொல்லப்படும்.

(உ - ம்.)

| முதல் வேற்றுமை | எட்டாம் வேற்றுமை | |
|---|---|---|
| தந்தை | தந்தாய்! | ஈறு திரிதல் |
| மன்னன் | மன்ன! | ஈறு குன்றல் |
| அரசன் | அரசனே! | ஈறு மிகுதல் |
| தோழி | தோழி! | இயல்பாதல் |
| புலவர் | புலவீர்! | ஈற்றயல் திரிதல் |

விளி வேற்றுமையை ஏற்கும் பெயர்கள் மேற்கூறப் பட்ட விகாரங்களுள் ஒன்றேயன்றிப் பலவற்றை ஏற்பதும் உண்டு.

(உ - ம்.) அண்ணன் — அண்ணா! ஈறுகெட்டு, அயல் திரிந்தது.

ஐயன் — ஐயாவே! ஈறு கெட்டு அயல் திரிந்து வகாரம் மிகுந்தது.

குறிப்பு:— முதல் வேற்றுமைப் பெயர்க்கும், இயல்பு விளியாய் வரும் பெயர்க்கும் சொல்லால் வேற்றுமை இல்லாவிடினும், பொருளால் வேற்றுமை இருப்பதைக் கண்டுகொள்க.

ந. சூ. 'எட்டன் உருபே எய்துபெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்(பு) அயல்
திரிபும் ஆம்;பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தான்அழைப் பதுவே.'

## விளி வேற்றுமையை ஏற்காத பெயர்கள்

44. வினாப்பெயர்களும், சுட்டுப்பெயர்களும், தன்மைப் பெயர்களும், முன்னிலைப் பெயர்களும், தான் தாம் என்னும் பெயர்களும், து, வை என்னும் விகுதிகளை உடைய அஃறிணைப் பெயர்களும் விளி வேற்றுமையை ஏற்காவாம்.

## வேற்றுமையில் சாரியை பெறுவன

45. பெயர்கள், வேற்றுமை உருபு ஏற்குங்கால் அன், இன், அற்று, அத்து, அ, உ, ன், தன், தம், நம், நும் என்னும் சாரியைகளைப் பெறுவதுண்டு.

(உ - ம்.)

| | | |
|---|---|---|
| இது + கு = இதற்கு | —அன் | சாரியை |
| பனை + கண் = பனையின்கண் | —இன் | சாரியை |
| அவ் + ஐ = அவற்றை | —அற்றுச் | சாரியை |
| மரம் + ஐ = மரத்தை | —அத்துச் | சாரியை |
| தன் + கு = தனக்கு | —அகரச் | சாரியை |
| அவன் + கு = அவனுக்கு | —உகரச் | சாரியை |
| மா + ஐ = மானை | —ன் | சாரியை |
| மகன் + ஐ = மகன்றனை | —தன் | சாரியை |
| எல்லாரும் + ஐ = எல்லார்தம்மையும் | —தம் | சாரியை |
| எல்லாம் + ஐ = எல்லாநம்மையும் | —நம் | சாரியை |
| எல்லீர் + ஐ = எல்லீர்நும்மையும் | —நும் | சாரியை |

46. சாரியை எற்குங்கால் சில பெயர்கள் ஒன்றேயன்றிப் பல சாரியைகளை எற்பதும் உண்டு.

(உ - ம்.) அது+கு=அதனுக்கு—அன், உ சாரியைகள்
மரம்+கு=மரத்தினுக்கு—அத்து, இன், உ சாரியைகள்

பயிற்சி:

வேற்றுமையாவது யாது? எட்டு வேற்றுமைக்கு உரிய உருபுகளை முறையே குறிப்பிடுக. முதல் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை இவற்றிற்குரிய சொல்லுருபுகளைக் குறிப்பிடுக. இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, இவற்றிற்குரிய பொருள்களைக் குறிப்பிடுக.

மூன்றாம் வேற்றுமை உடனிகழ்ச்சிப் பொருளுக்கும், நான்காம் வேற்றுமை அதுவாதல் பொருட்டு ஆகிய பொருள்களுக்கும், ஐந்தாம் வேற்றுமை நீங்கற்பொருளுக்கும், ஆறாம் வேற்றுமைக் குணப்பண்புத் தற்கிழமைப் பொருளுக்கும் முறையே ஒவ்வோர் உதாரணம் கொடுக்க.

தற்கிழமை, பிறிதின் கிழமை, உவமப் பொருவு, உறழ் பொருவு இவற்றை உதாரணங்கள் மூலம் விளக்குக.

பின் வரும் உதாரணங்கள் இன்ன வேற்றுமையில் இன்ன பொருளில் வந்தன என விளக்குக:—வீட்டைக் கட்டினான்; மண்ணால் குடம் வனைந்தான்; குண்டலத்திற்குப் பொன் கொடுத்தான்; சீதைக்குக் கணவன் இராமன்; ஊரின் நீங்கினான்; நெல்லினது பொரி; இளமையின்கண் செல்வம் வாய்த்தது.

விளி வேற்றுமையில் ஒன்றுக்கு மேற்பட்ட விகாரங்களை அடைந்து வருவனவற்றிற்கு இரண்டு உதாரணங்கள் தருக.

பின் வருவனவற்றிலுள்ள சாரியைகளைக் குறிப்பிடுக:—அதனுக்கு, அவனுக்கு, மானை, மரத்தினுக்கு, எல்லீர்நம்மையும், அவற்றை.

## வினைச்சொல்

ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது வினைச் சொல்லாம். [வினை=தொழில்.]

வினைச்சொல், செய்பவன், கருவி, நிலம், செயல், காலம்,செயப்படு பொருள் என்னும் ஆறையும் தெரிவிக்கும்.

(உ-ம்.) படித்தான்.

இதில் படிப்பவனாகிய மாணவனும், கருவியாகிய புத்தகமும், இடமாகிய பாடசாலையும், செயலாகிய படித்தலும், இறந்த காலமும், செயப்படு பொருளாகிய பாடமும் தோன்ற நிற்றல் காண்க.

குறிப்பு:—சில வினைச்சொற்கள் செயப்படு பொருளை உணர்த்தா. அவை செயப்படு பொருள் குன்றிய வினை எனப்படும்.

(உ-ம்.) நடந்தான்.

இதில் செயப்படு பொருள் தோன்றாமை அறிக.

47. வினைச்சொல் தெரிநிலை வினை, குறிப்பு வினை என்று இரு வகைப்படும்.

48. தெரிநிலை வினை:—மேற்கூறிய செய்பவன் முதலியவற்றை வெளிப்படையாகத் தெரிவிக்கும் வினை, தெரிநிலை வினையாம். [தெரிநிலை=தெரிந்த நிலையில் இருப்பது.]

ந. சூ. 'செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.'

49. குறிப்பு வினை:—பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறு வகைப் பெயர்ச்சொற்களையும் பகுதியாகக் கொண்டு, மேற்கூறிய செய்பவன் முதலிய ஆறனுள், செய்பவனை மட்டும் விகுதியால் வெளிப்

படையாகக் காட்டி, மற்றவைகளைக் குறிப்பாகக் காட்டும் வினை குறிப்பு வினையாம்.

குறிப்பு வினை இதனால் ஆறு வகைப்படுவதை அறிக.

(உ - ம்.)

பொன்னன் (பொன்னை உடையவன்)—பொருளின் அடியாகப் பிறந்த குறிப்பு வினை.

மதுரையான்—இடத்தின் அடியாகப் பிறந்த குறிப்பு வினை.

ஆதிரையான்—காலத்தின் அடியாகப் பிறந்த குறிப்பு வினை.

குறுந்தாளன்—(குறுகிய கால்களையுடையவன்)—சினையின் அடியாகப் பிறந்த குறிப்பு வினை.

வெள்ளையன்—பண்பின் அடியாகப் பிறந்த குறிப்பு வினை.

வருகையன்—தொழிலின் அடியாகப் பிறந்த குறிப்பு வினை.

இவற்றுள் பொன்னன் என்பது செய்பவனை மட்டும் விகுதியால் வெளிப்படையாகக் காட்டி, பொன்னை உடையவனு யிருந்தான், இருக்கிறன், இருப்பான் எனச் சொல்வோனது குறிப்பிற்கிணங்க ஏதேனும் ஒரு காலத்தையும், பொன்னை உடையனுயிருக்கும் செயலையும், மற்றும் நிலம், கருவி, செயப்படு பொருள் ஆகியவற்றையும் குறிப்பாகக் காட்டுதல் ஆராய்ந்தறிக. மற்றக் குறிப்பு வினைகளும் இவ்வாறே செய்பவன் முதலிய ஆறையும் காட்டுதல் கண்டுகொள்க.

குறிப்பு :—பால் காட்டும் விகுதிகளை ஏற்ற பெயர்களே வினைச்சொல்லாகக் குறிக்கப்படும்போது குறிப்பு வினைகளாகும்.

ந. சூ. ‘பொருள்முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.’

50. இவற்றுள் தெரிநிலை வினையானது, தன் வினை, பிற வினை, செய்யப்படு பொருள் குன்று வினை, செயப்படு பொருள் குன்றிய வினை, செய்வினை, செயப்பாட்டு வினை முதலியனவாகப் பல வகைப்படும்.

[இவற்றைப் பற்றி இரண்டாம் பாரப் பகுதியில் கூறப்பட்டுள்ளது காண்க.]

### உடன்பாட்டு வினை—எதிர்மறை வினை

51. எல்லா வினைச்சொற்களும் உடன்பாடு, எதிர்மறை என்னும் இரு வகையில் பயின்று வரும்.

52. உடன்பாடாவது, தொழில் நிகழ்ச்சி உண்டென்பதை உணர்த்துவது. உடன்பாட்டில் வரும் வினை உடன்பாட்டு வினையாம். இது விதி வினை என்றும் சொல்லப்படும்.

(உ - ம்.) உண்பான், நின்றான்.

53. எதிர்மறையாவது, தொழில் நிகழ்ச்சி இல்லாததை உணர்த்துவது. எதிர்மறையில் வரும் வினை, எதிர்மறை வினையாம்; இது மறை வினை என்றும் கூறப்படும்.

(உ - ம்.) உண்டிலன், நின்றிலன்.

### முற்று வினை—எச்ச வினை

54. வினைச்சொற்களையெல்லாம் முற்று வினை, எச்ச வினை என இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

55. அவற்றுள் முற்று வினை, வினை முற்று என்றும் சொல்லப்படும்.

56. எச்ச வினை, பெயரெச்சம், வினையெச்சம் என இரு வகைப்படும்.

இதனால், வினைச்சொற்கள் வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என மூன்று வகைப்படுதல் காண்க.

### வினை முற்று

57. வினை முற்றாவது, திணை, பால், எண், இடம் ஆகியவற்றை உணர்த்தும் விகுதிகளைப் பெற்றுப் பொருள் முடிந்து நிற்கும் வினையாம்.

58. தெரிநிலையும் குறிப்புமாகிய வினைகள், முற்றாய் வரும் விதத்தால் தெரிநிலை வினை முற்று, குறிப்பு வினை முற்று என இரு வகைப்படும்.

### தெரிநிலை வினை முற்று

59. உடன்பாடு, எதிர்மறை என்னும் இரு வகையில் பயின்று வருவதால், தெரிநிலை வினை முற்றானது, உடன் பாட்டுத் தெரிநிலை வினை முற்று, எதிர்மறைத் தெரிநிலை வினை முற்று என இரு வகைப்படும். இரு வகைத் தெரிநிலை வினை முற்றுக்களும் தன்மை வினை முற்று, முன்னிலை வினை முற்று, படர்க்கை வினை முற்று, ஏவல் வினை முற்று, வியங்கோள் வினை முற்று என ஐந்து வகைப்படும்.

### உடன்பாட்டு வினைகள்

60. தன்மை வினை முற்று:—இது தன்மை ஒருமை வினை முற்று, தன்மைப் பன்மை வினை முற்று என இரு வகைப்படும். தன்மை ஒருமை வினை முற்று விகுதிகளாவன, என், ஏன், அன், அல் என்பன. இவற்றுள் 'அல்' விகுதி எதிர் காலத்தில் மட்டும் வரும். தன்மைப் பன்மை வினை முற்று விகுதிகளாவன, அம், ஆம், எம், ஏம், ஓம் என்பன.

(உ - ம்.)

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் | விகுதி |
|---|---|---|---|---|
| தன்மை ஒருமை | உண்டனென் | உண்கின்றனென் | உண்பென் | என் |
| | உண்டேன் | உண்கின்றேன் | உண்பேன் | ஏன் |
| | உண்டனன் | உண்கின்றனன் | உண்பன் | அன் |
| தன்மைப் பன்மை | கண்டனம் | காண்கின்றனம் | காண்பம் | அம் |
| | கண்டாம் | காண்கின்றாம் | காண்பாம் | ஆம் |
| | கண்டனெம் | காண்கின்றனெம் | காண்பெம் | எம் |
| | கண்டேம் | காண்கின்றேம் | காண்பேம் | ஏம் |
| | கண்டோம் | காண்கின்றோம் | காண்போம் | ஓம் |

61. முன்னிலை வினை முற்று :—இது முன்னிலை ஒருமை வினை முற்று, முன்னிலைப் பன்மை வினை முற்று என இரு வகைப்படும். முன்னிலை ஒருமை வினை முற்று விகுதிகளாவன ஐ, ஆய், இ என்பன. இவற்றுள் இகர விகுதி தானே எதிர் காலம் காட்டும். முன்னிலைப் பன்மை வினை முற்று விகுதிகளாவன, இர், ஈர் என்பன.

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் | விகுதி |
|---|---|---|---|---|
| முன்னிலை ஒருமை | சென்றனை | செல்கின்றனை | செல்வை | ஐ |
| | சென்றாய் | செல்கின்றாய் | செல்வாய் | ஆய் |
| | சென்றி | செல்லாநின்றி | சேறி | இ |
| முன்னிலைப் பன்மை | சென்றனிர் | செல்கின்றனிர் | செல்விர் | இர் |
| | சென்றீர் | செல்கின்றீர் | செல்வீர் | ஈர் |

62. படர்க்கை வினை முற்று :—இஃது ஆண்பால் வினை முற்று, பெண் பால் வினை முற்று, பலர் பால் வினை முற்று, ஒன்றன் பால் வினை முற்று, பலவின் பால் வினை முற்று என ஐந்து வகைப்படும். [ஒருமை பன்மைகள் இவற்றுக்குள்ளேயே அடங்கியிருத்தல் காண்க.] படர்க்கை வினை முற்று விகுதிகளாவன :—

| | | விகுதி |
|---|---|---|
| 1. | ஆண் பால் வினை முற்று | அன், ஆன் |
| 2. | பெண் பால் வினை முற்று | அள், ஆள் |
| 3. | பலர் பால் வினை முற்று | அர், ஆர், ப, கள் |
| 4. | ஒன்றன் பால் வினை முற்று | து, று |
| 5. | பலவின் பால் வினை முற்று | அ |

இவற்றுள், பவ்விகுதி நிகழ் காலத்தில் வாராது ; தானே காலம் காட்டும். றுவ்விகுதி இறந்த காலத்தில் மட்டும் வரும். கள் விகுதி, விகுதிமேல் விகுதியாக வரும்.

(உ - ம்.) இறந்தகாலம்-நிகழ்காலம் - எதிர்காலம்-விகுதி

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் | விகுதி |
|---|---|---|---|---|
| ஆண்பால் வினைமுற்று | செய்தனன் | செய்கின்றனன் | செய்வன் | அன் |
| | செய்தான் | செய்கின்றான் | செய்வான் | ஆன் |
| பெண்பால் வினைமுற்று | செய்தனள் | செய்கின்றனள் | செய்வள் | அள் |
| | செய்தாள் | செய்கின்றாள் | செய்வாள் | ஆள் |
| பலர்பால் வினைமுற்று | செய்தனர் | செய்கின்றனர் | செய்வர் | அர் |
| | செய்தார் | செய்கின்றார் | செய்வார் | ஆர் |
| | செய்ப | —— | செய்ப | ப |
| | செய்தார்கள் | செய்கின்றார்கள் | செய்வார்கள் | கள் |
| ஒன்றன்பால் வினைமுற்று | செய்தது | செய்கின்றது | செய்வது | து |
| | போயிற்று | —— | —— | று |
| பலவின்பால் வினைமுற்று | செய்தன | செய்கின்றன | செய்வன | அ |

## எதிர்மறை வினைகள்

63. எதிர்மறைத் தெரிநிலை வினைமுற்றுக்கள் மேற்கூறிய விகுதிகளோடு எதிர்மறை இடைநிலைகளைப் பெற்று வரும். எதிர்மறை இடைநிலைகளாவன, இல், அல், ஆ என்பன.

(உ - ம்.)

| | இறந்தகாலம் | நிகழ்காலம் |
|---|---|---|
| தன்மை ஒருமை | நடந்திலேன் | நடக்கின்றிலேன் |
| தன்மைப் பன்மை | நடந்திலேம் | நடக்கின்றிலேம் |
| முன்னிலை ஒருமை | நடந்திலாய் | நடக்கின்றிலாய் |
| முன்னிலைப் பன்மை | நடந்திலீர் | நடக்கின்றிலீர் |
| படர்க்கை ஆண் பால் | நடந்திலன் | நடக்கின்றிலன் |
| படர்க்கைப் பெண் பால் | நடந்திலள் | நடக்கின்றிலள் |
| படர்க்கைப் பலர் பால் | நடந்திலர் | நடக்கின்றிலர் |
| படர்க்கை ஒன்றன் பால் | நடந்திலது | நடக்கின்றிலது |
| படர்க்கைப்பலவின் பால் | நடந்தில | நடக்கின்றில |

இவற்றுள் 'இல்' இடைநிலை வந்தது.

எதிர் காலம்

உண்ணலன், செய்யலன்.

இவற்றுள் 'அல்' இடைநிலையாக வந்தது.

உண்ணாது, உண்ணாதன.

இவற்றுள் 'ஆ' இடைநிலையாக வந்தது.

## செய்யும் என்னும் முற்று

64. செய்யும் என்னும் வாய்ப்பாட்டையுடைய வினைமுற்று, படர்க்கைக்குரிய ஆண் பால், பெண் பால், ஒன்றன் பால், பலவின் பால் ஆகிய நான்கு பால்களிலும் வரும். [வாய்பாடு=சொல்லும் முறை.]

இதனால், இது பலர் பால் படர்க்கை, தன்மை, முன்னிலை ஆகிய இடங்களில் வாராது என அறிக.

இவ்வினை முற்று நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் காட்டும்; இறந்த காலம் காட்டாது.

(உ - ம்.) அவன் உண்ணும்.
அவள் உண்ணும்.
அஃது உண்ணும்.
அவை உண்ணும்.

ந. சூ. 'பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே.'

## ஏவல் வினை முற்று

65. ஏவல் வினை முற்றாவது, கட்டளைப் பொருளில் வரும் வினை முற்றாம். இஃது ஏவல் ஒருமை வினை முற்று, ஏவல் பன்மை வினை முற்று என இரு வகைப்படும்.

### உடன்பாடு

66. ஏவல் ஒருமை வினை முற்று:—இதற்கு ஆய், இ என்பவை விகுதிகளாக வரும். இவ்வினை முற்று விகுதி குன்றி வருவதுமுண்டு.

(உ - ம்.) உண்ணாய், செய்யாய்—ஆய் விகுதி } விகுதி பெற்று
உண்ணுதி, செய்தி—இ விகுதி } வந்தன.
உண், செய் —விகுதி குன்றி வந்தன.

67. ஏவற்பன்மை வினை முற்று:—இதற்கு மின், உம் என்பவை விகுதிகளாக வரும்.

(உ - ம்.) உண்மின், செய்ம்மின் —மின் விகுதி.
உண்ணும், செய்யும் —உம் விகுதி.

### எதிர்மறை

68. ஏவல் ஒருமை வினை முற்று:—இஃது ஆ என்னும் எதிர்மறை இடைநிலையையும், ஏ, இ என்னும் விகுதிகளையும் பெற்று வரும். இவ்விகுதிகள் த் என்னும் எழுத்துப் பேற்றைப் பெற்று வரும். [எழுத்துப் பேறு—எழுத்தைப் பெறுதல்.]

(உ - ம்.) செல்லாதே, செல்லாதி.

69. ஏவற்பன்மை வினை முற்று:—இஃது அல், ஆ என்னும் எதிர்மறை இடைநிலைகளையும் மின், ஈர், கள் என்னும் விகுதிகளையும் பெற்று வரும்.

(உ - ம்.) செல்லன்மின், செல்லாதீர், செல்லாதீர்கள்.

### வியங்கோள் வினை முற்று

70. வியங்கோள் வினை முற்றாவது, மரியாதையோடு கூடிய கட்டளைப் பொருளிலும், வாழ்த்துதல், வைதல், வேண்டிக்கொள்ளல் முதலிய பொருள்களிலும் ஏவல் போல வரும் வினை முற்றாம். இஃது ஐம்பால் மூவிடங்களிலும் வரும். இதில் ஒருமை பன்மை என்னும் பகுப்பு இல்லை.

**71.** வியங்கோள் வினை முற்று விகுதிகளாவன, க, இய, இயர், இ, அ என்பன. இவ்வினை முற்று எதிர்மறையில் வருங்கால் மேற்கூறிய விகுதிகளோடு அல் என்னும் இடைநிலையையும் பெற்று வரும்.

(உ - ம்.) உடன்பாடு

| | வாழ்த்துதல் | வைதல் | கட்டளை | வேண்டிக்கொள்ளல் | விகுதி. |
|---|---|---|---|---|---|
| யான், யாம். | வாழ்க | ஒழிக | செய்க | அருள்க | க. |
| நீ, நீர், நீங்கள். | வாழிய | ஒழிய | செய்யிய | அருளிய | இய. |
| அவன், அவள் | வாழியர் | — | செய்யியர் | அருளியர் | இயர். |
| அவர், அது, | வாழி | — | — | — | இ. |
| அவை. | வாழ | — | — | அருள | அ. |

எதிர்மறை

(உ - ம்.) உண்ணற்க, சொல்லற்க, செய்யற்க.

ந. சூ. 'கயவோடு ரவ்வோற்(று) ஈற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப.'

## குறிப்பு வினை முற்று

**72.** உடன்பாடு, எதிர் மறை என்னும் இரு வகையில் பயின்று வரும் விதத்தால் குறிப்பு வினை முற்றும் உடன்பாட்டுக் குறிப்பு வினைமுற்று, எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று என இரு வகைப்படும்.

தெரிநிலை வினை முற்றிற்குக் கூறிய விகுதிகளே இதற்கும் விகுதிகளாம்.

**73.** குறிப்பு வினை முற்று, ஏவல், வியங்கோள்களில் வாராது. அதனால், அது தன்மை வினை முற்று, முன்னிலை வினை முற்று, படர்க்கை வினை முற்று என மூவகைப்படும்.

குறிப்பு வினை முற்றில் காலம் இன்னதென அறியக்கூடாமையால், அஃது ஐம்பால் மூவிடங்களில் பயின்று வருவதாலுண்டாகும் விகற்பங்கள் ஒன்பதேயாகும் • என்பதை உணர்க.

74. எதிர்மறைக் குறிப்பு வினை முற்றுக்கள் எதிர்மறைப் பொருளுணர்த்தும் அல், இல் என்னும் பண்படியாகப் பிறந்து வினை முற்று விகுதிகளை ஏற்று வருவனவாம்.

| (உ - ம்.) | உடன்பாடு | எதிர் மறை |
|---|---|---|
| 1. தன்மை ஒருமை | —வில்லினேன். | அல்லேன், இல்லேன். |
| 2. தன்மைப் பன்மை | — வில்லினேம். | அல்லேம், இல்லேம். |
| 3. முன்னிலை ஒருமை | — வில்லினை. | அல்லாய், இல்லாய். |
| 4. முன்னிலைப் பன்மை | — வில்லினீர். | அல்லீர், இல்லீர். |
| 5. படர்க்கை ஆண் பால் | — வில்லினன். | அல்லன், இல்லன். |
| 6. படர்க்கைப் பெண் பால் | — வில்லினள். | அல்லள், இல்லள். |
| 7. படர்க்கைப் பலர் பால் | — வில்லினர். | அல்லர், இல்லர். |
| 8. படர்க்கை ஒன்றன் பால் | — கோட்டது. | அல்லது, இல்லது. |
| 9. படர்க்கைப் பலவின் பால் | — கோட்டன. | அல்லன, இல்லன. |

## வேறு, இல்லை, உண்டு என்னும் முற்றுக்கள்

75. வேறு, இல்லை, உண்டு என்னும் வினைக்குறிப்பு முற்றுக்கள் ஐம்பால் மூவிடங்களிலும் வருவனவாம்.

(உ - ம்.) யான், யாம்,<br>
நீ, நீர், நீங்கள்,<br>
அவன், அவள், — வேறு, இல்லை, உண்டு.<br>
அவர், அது,<br>
அவை.

ந. சூ. 'வே(று)இல்லை உண்(டு)ஐம் பால்மூ விடத்தன.'

## யார் என்னும் வினை முற்று

76. யார் என்பது, வினாப்பொருளில் வரும் வினைக் குறிப்புமுற்றாம். அஃது உயர்திணைக்குரிய ஆண் பால், பெண் பால், பலர் பால் ஆகிய மூன்று பால்களிலும் வரும்.

(உ - ம்.) அவன் யார்? அவள் யார்? அவர் யார்?

குறிப்பு :—அஃதியார், அவை யார் என அஃறிணையில் வருதலும், யான் யார், யாம் யார், நீ யார், நீர் யார், நீங்கள் யார் எனத் தன்மை முன்னிலைகளில் வருதலும் புதியன புகுதலாம்.

[புதியன புகுதலாவது, புதியனவாய் இக்காலத்தில் வழங்குதல்.]

ந. சூ. 'யாரேன் வினைவினைக் குறிப்புயர் முப்பால்.'

## எவன் என்னும் வினை முற்று

77. எவன் என்பது, வினைப் பொருளில் வரும் வினைக் குறிப்பு முற்றும். அஃது, அஃறிணைக்குரிய ஒன்றன் பால், பலவின் பால் ஆகிய இரண்டு பால்களிலும் வரும்.

(உ - ம்.) அஃது எவன்? அவை எவன்?

குறிப்பு:—இவ்வினை முற்று, என், என்ன, என்னை என விகாரப்பட்டு வரும். அவ்வாறு வருதல் புதியன புகுதலாம். இஃது உயர்திணை ஆண் பாலை உணர்த்தும் எவன் என்பதன்று.

ந. சூ. 'எவனேன் வினைவினைக் குறிப்பிழி இருபால்.'

## பெயரேச்சம்

78. பெயரெச்சமாவது, பெயரைக் கொண்டு முடிவு பெறும் குறை வினைச்சொல்லாம். தெரிநிலை, குறிப்பு என்னும் இரு வகை வினைகளும் பெயரெச்சமாக வரும் விதத்தால், பெயரெச்சம் தெரிநிலைப் பெயரெச்சம் என்றும், குறிப்புப் பெயரெச்சம் என்றும் இரு வகைப்படும்.

## தெரிநிலைப் பெயரெச்சம்

79. தெரிநிலைப் பெயரெச்சமானது, உடன்பாடு எதிர் மறை என்னும் இரு வகையில் வரும் விதத்தால் உடன்பாட்டுத் தெரிநிலைப் பெயரெச்சம், எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சம் என இரு வகைப்படும்.

80. உடன்பாட்டுத் தெரிநிலைப் பெயரெச்சம்:—இது மூன்று காலங்களிலும் பயின்று வரும். இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் வருவனவற்றிற்கு அ என்பதும், எதிர் காலத்தில் வருவதற்கு உம் என்பதும் விகுதிகளாக வரும். இறந்த காலத்தில் வரும் பெயரெச்சம் செய்த என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் என்றும், நிகழ்காலத்தில் வரும் பெயரெச்சம் செய்கின்ற என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் என்றும், எதிர் காலத்தில் வரும் பெயரெச்சம் செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் என்றும் சொல்லப்படும்.

81. பெயரெச்சங்களால் கொண்டு முடிக்கப்பெறும் வினைச்சொற்கள் செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என ஆறு வகைப்படும்.

(உ - ம்.)

**இறந்தகாலம்—நிகழ்காலம்—எதிர் காலம்.**

| | | | | |
|---|---|---|---|---|
| உண்ட | —உண்கிற | —உண்ணும் | —மனிதன் | —செய்பவன். |
| வெட்டிய | —வெட்டுகிற | —வெட்டும் | —வாள் | —கருவி. |
| உழுத | —உழுகிற | —உழும் | —நிலம் | —நிலம். |
| நட்ட | —நடுகிற | —நடும் | —நடவு | —செயல். |
| பிறந்த | —பிறக்கிற | —பிறக்கும் | —நாள் | —காலம். |
| உண்ட | —உண்கிற | —உண்ணும் | —உணவு | —செய்பொருள். |

82. எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சம்:-இஃது ஆ என்னும் எதிர்மறை இடைநிலையையும், அ என்னும் விகுதியையும் பெற்று வரும். இஃது ஈறு கெட்டு வருவதும் உண்டு.

(உ-ம்.) ஈறு கெடாது வந்தன—ஈறு கெட்டு வந்தன
உண்ணாத (மனிதன்)—உண்ணா (மனிதன்)
ஓடாத(குதிரை) —ஓடா(க்குதிரை)

## குறிப்புப் பெயரெச்சம்

83. குறிப்புப் பெயரெச்சமும் உடன்பாடு, எதிர்மறை என்னும் இரு வகையில் பயின்று வரும் விதத்தால் உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சம் என்றும், எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம் என்றும் இரு வகைப்படும். இவ்விரு வகைப் பெயரெச்சங்கட்கும் அ என்பது விகுதியாம்.

84. எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம் இவ்விகுதியோடு எதிர்மறை ஆகார இடைநிலையையும் பெற்று வரும். இதுவும் ஈறு கெட்டு வருதலும் உண்டு.

(உ - ம்.) உடன்பாடு

நல்ல (பையன்)
கரிய (குதிரை)

எதிர் மறை

| ஈறு கெடாது வந்தன | | ஈறு கெட்டு வந்தன |
|---|---|---|
| இல்லாத (குதிரை) | — | இல்லா(க்குதிரை) |
| அல்லாத (பொருள்) | — | அல்லா(ப்பொருள்) |

ந. சூ. 'செய்த செய்கின்ற செய்புமேன் பாட்டில்
காலமும் இடமும் தோன்றிப் பாலோடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரேச் சம்மே.'

## வினையெச்சம்

85. வினையெச்சமாவது, வினைச்சொல்லைக் கொண்டு முடிவு பெறும் குறை வினைச்சொல்லாம். தெரிநிலையும் குறிப்புமாகிய வினைகள், வினையெச்சமாக வரும் விதத்தால் தெரிநிலை வினையெச்சம், குறிப்பு வினையெச்சம் என இரு வகைப்படும்.

## தெரிநிலை வினையெச்சம்

86. தெரிநிலை வினையெச்சம் உடன்பாடு, எதிர்மறை என்னும் இரு வகையில் பயின்று வரும் விதத்தால் உடன்பாட்டுத் தெரிநிலை வினையெச்சம், எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம் என இரு வகைப்படும்.

87. உடன்பாட்டுத் தெரிநிலை வினையெச்சம்:—இது மூன்று காலங்களிலும் வரும். இறந்த காலத்தில் வரும் வினையெச்சங்களுக்கு உ, இ, ய், ஆ என்பவை விகுதிகளாக வரும். இவற்றுள் உ, இ, ய் என்னும் விகுதிகளைப் பெற்று வருவன செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்றும், ஆ என்னும் விகுதி பெற்று வருவது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்றும் சொல்லப்படும்.

(உ - ம்.)

உண்டு (சென்றான்), உ-விகுதி
ஓடி (வந்தான்), இ-விகுதி
போய்(ச்சேர்ந்தான்), ய்-விகுதி
} 'செய்து' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

செய்யா(க்கொடுத்தான்)
=(செய்துகொடுத்தான்)
} 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

88. நிகழ்காலத்தில் வரும் வினையெச்சங்களுக்கு அ என்பது விகுதியாம். இவ்வினையெச்சம், செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்று சொல்லப்படும்.

(உ - ம்.) படிக்க, உண்ண (வந்தான்.)

89. எதிர்காலத்தில் வரும் வினையெச்சங்களுக்கு இன், ஆல், கால் என்பவை விகுதிகளாம். இவ்வினையெச்சம் செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்று சொல்லப்படும்.

(உ - ம்.) உண்ணின் (வளரும்)
செய்தால் (முடியும்)
செய்தக்கால் (தீரும்)
} 'செயின்' வாய்பாட்டு வினையெச்சம்.

90. எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம்:—இஃது ஆ என்னும் எதிர்மறை இடை நிலையையும், மல், மை, மே, து என்னும் விகுதிகளையும் பெற்று வருவதாம். இவ்வினை எச்சம் ஈறு கெட்டும் வரும்.

(உ - ம்.) ஈறு கெடாது வந்தன ஈறு கெட்டு வந்தன

| | | | |
|---|---|---|---|
| உண்ணுமல்<br>உண்ணுமை<br>உண்ணுமே<br>உண்ணுது | சென்றுன். | உண்ணு<br>தின்னு | வந்தான். |

குறிப்பு வினையெச்சம்

91. குறிப்பு வினையெச்சமும் உடன்பாடு, எதிர்மறை என்னும் இரு வகையில் பயின்று வரும் விதத்தால் உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சம் என்றும், எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம் என்றும் இரு வகைப்படும்.

92. உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சம்:—இஃது அ என்னும் விகுதியைப் பெற்று வரும்.

(உ - ம்.) மெல்ல(நடந்தான்.)
பைய(ச் சென்றுன்.)
வலிய(ப் பிடித்தான்.)

93. எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம்:—இஃது அல், இல் என்னும் எதிர்மறைப் பண்படியாகப் பிறந்து, ஆகாரச் சாரியையும், மல், மை, மே, து, றி என்னும் விகுதிகளையும் பெற்று வரும். றி விகுதியைப் பெறுங்கால் இஃது ஆகாரச் சாரியை பெருது வரும்.

(உ - ம்)

| | | | |
|---|---|---|---|
| அல்லாமல்<br>அல்லாமை<br>அல்லாமே<br>அல்லாது | இருந்தான். | இல்லாமல்<br>இல்லாமை<br>இல்லாமே<br>இல்லாது | சென்றுன். |

ஆகாரச் சாரியை பெற்று வந்தன.

| | |
|---|---|
| அன்றி (இறந்தான்.)<br>இன்றி (ச்சென்றுன்.) | ஆகாரச் சாரியை பெருது வந்தன. |

94. வினையெச்சமானது வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்னும் மூவகை வினைச் சொற்களையும், தொழிற்பெயர், வினையாலணையும் பெயர் என்னும் இரு வகைப் பெயர்ச்சொற்களையும் கொண்டு முடியும்.

(உ - ம்.)

சென்று (வந்தான்)
சென்று (வந்த) மனிதன்
சென்று (வந்து) கண்டான்
} வினையெச்சமானது, வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்னும் மூவகை வினைச் சொற்களைக் கொண்டு முடிந்தது.

மெல்ல (நடத்தல்)
மெல்ல (நடந்தவன்)
} வினையெச்சமானது, தொழிற்பெயர், வினையாலணையும் பெயர் என்னும் இரு வகைப் பெயர்ச்சொற்களைக்கொண்டு முடிந்தது.

பயிற்சி :

தெரிநிலை வினையாவது யாது? குறிப்பு வினையாவது யாது? உடன்பாடு என்பது என்ன? எதிர்மறை என்பது என்ன? முற்று வினையாவது யாது? எச்ச வினையாவது யாது? எச்ச வினை எத்தனை வகைப்படும்? தெரிநிலைவினைமுற்றுஎத்தனைவகைப்படும்? குறிப்பு வினை முற்று எத்தனை வகைப்படும்? ஏவல் வினை முற்றாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? உதாரணங்கள் தருக. வியங்கோள் வினை முற்றாவது யாது? அஃது எத்தனை வகைப்படும்? உதாரணங்கள் தருக. ஏவலுக்கும் வியங்கோளுக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை? பெயரெச்சம் எத்தனை வகைப்படும்? ஒவ்வொன்றுக்கும் உதாரணங்கள் தருக. வினை எச்சம் எத்தனை வகைப்படும்? ஒவ்வொன்றுக்கும் உதாரணங்கள் தருக. பின் வரும் வாக்கியங்களிலுள்ள வினை முற்றுக்கள், பெயரெச்சங்கள், வினையெச்சங்கள் இவற்றை எடுத்து எழுதி, இவை இன்ன வகையைச் சார்ந்தவை எனவும் விளக்குக: 1. ஆசிரியர் மெல்ல நடந்து சென்றார். 2. அவன் அந்த இருட்டில் பயம் இல்லாமல் சென்றான். 3. இராமன் இன்றி இக்காரியம் நடவாது. 4. நீர் உண்ட மேகம் மழை பொழியும். 5. இந்தச் சிறிய குதிரை அந்தப் பெரிய குதிரையைவிட வேகமாய் ஓடிற்று.

## இடைச்சொல்

95. பெயர் வினைகளைப்போலத் தனித்து நடக்கும் தன்மையின்றி, அவற்றைச் சார்ந்து, அவற்றின் முன்னாக வேனும் பின்னாகவேனும் பயின்று வரும் சொற்கள் இடைச் சொற்களாம்.

96. வேற்றுமை உருபுகளும், விகுதிகளும், இடை நிலைகளும், சாரியைகளும், உவம உருபுகளும், சுட்டுக்களும், வினாக்களும், குறிப்பினால் வருவனவும், இசை நிறையும், அசைநிலையும், தத்தமக்கு உரிய பொருளை அறிவிப்பனவும் என இடைச்சொல் பலவாம்.

[இவற்றுள் பல முதலாம் இரண்டாம் பாரப் பகுதி களில் முன்னர்க் கூறப்பட்டன.]

தத்தம் பொருளை உணர்த்தும் இடைச்சொற்கள் சில வருமாறு:—

### ஏகார இடைச்சொல்

97. ஏகார இடைச்சொல், பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசை நிறை என்னும் ஆறு பொருள்களில் வரும்.

(உ - ம்.)

1. இவர்களுள் இராமனே பெரியவன்.

இதில் ஏகாரம் இராமனை ஒரு கூட்டத்திலிருந்து பிரிப்பதால் பிரிநிலை.

2. கண்ணனே கண்டான்?

இதில் ஏகாரம் வினாப்பொருளைத் தருதலால் வினா.

3. நிலமே, நீரே, தீயே, வளியே, வானே என்றைந்து பூதங்கள்.

இவற்றிலுள்ள ஏகாரங்கள் எண்ணி நிற்றலால் எண்.

4. செல் விளையும்மே.

இதில் எகாரம் யாதொரு பொருளையும் குறிக்காமல் ஈற்றில் நிற்றலால் ஈற்றசை.

5. கண்ணன் முதன்மையானவனே.

இதில் எகாரம் கண்ணன் முதன்மையானவன் என்பதைத் தெளிவாகக் கூறுதலால் தேற்றம்.

6. எஎ இவளொருத்தி பேடி.

இதிலுள்ள எகாரங்கள் யாதொரு பொருளையும் தாராது இசையை நிறைத்து நிற்றலால் இசை நிறை.

ந. சூ. 'பிரிநிலை வினாஎண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை எனஆ(று) ஏகா ரம்மே.'

ஓகார இடைச்சொல்

98. ஓகார இடைச்சொல் ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசைநிலை, பிரிநிலை என்னும் எட்டுப் பொருள்களில் வரும்.

இவற்றுள் சிறப்பு உயர்வு சிறப்பு, இழிவு சிறப்பு என இரு வகைப்படும்.

(உ - ம்.)

1. படித்தற்கோ வந்தான்.

இதில் ஓகாரம் படித்தற்கு அன்று; விளையாடுதற்கு வந்தான் என்ற ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

2. நன்கு படித்தனையோ ?

இதில் ஓகாரம் வினாப்பொருளைத் தருதலால் வினா.

3. ஓஓ பெரியன்! ஓஓ கொடியன்!

இவற்றிலுள்ள ஓகாரங்கள் முறையே உயர்வின் மிகுதியையும் இழிவின் மிகுதியையும் காட்டுதலால், முன்னது உயர்வு சிறப்பு; பின்னது இழிவு சிறப்பு.

4. நீயோ வருவாய்.

இதில் ஓகாரம் நீ வரமாட்டாய் என்னும் பொருளைத் தருதலால் எதிர்மறை.

5. ஆணோ, அதுவுமன்று; பெண்ணோ, அதுவுமன்று.

இங்ஙனம் ஓர் அலியைப் பார்த்துக் கூறும்போது, அத் தன்மைகளைப் பெற்றில்லாமையைத் தெளிவுபடக் கூறுதலால் தெரிநிலை.

6. ஓஒ மாண்டனன்!

இதில் ஓகாரங்கள் கழிந்ததைக் கருதி இரங்குதலைக் கூறுதலால் கழிவு.

7. கூறுவன் வம்மினோ புலவீர்!

இதில் ஓகாரம் ஒரு பொருளையும் தராது நிற்றலால் அசை நிலை.

8. இவர்களில் இவனோ திருடினான்?

இதில் ஓகாரம் ஒரு கூட்டத்திலிருந்து ஒருவனைப் பிரித்து நிற்றலால் பிரிநிலை.

ந. சூ. 'ஒழியிசை வினாச்சிறப்(பு)எதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப்(பு) எனஎட்(டு) ஓவே.'

### உம்மை இடைச்சொல்

99. உம்மை இடைச்சொல், எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, அளவை, தெரிநிலை, ஆக்கம் என்னும் எட்டு விதப் பொருள்களில் வரும்.

இதில் எச்சம் இறந்தது தழீஇய எச்சம், எதிரது தழீஇய எச்சம் என இரு வகைப்படும். இறந்தது தழீஇய எச்சமாவது, முன் நடந்ததைச் சேர்த்துக்கொள்ளும் எச்சம். எதிரது தழீஇய எச்சமாவது, இனி நடக்கப் போவதைச் சேர்த்துக்கொள்ளும் எச்சம். இதிலுள்ள சிறப்பும் உயர்வு சிறப்பு, இழிவு சிறப்பு என இரு வகைப்படும்.

(உ - ம்.)

1. இராமன் வருதற்கும் உரியன்.

இதிலுள்ள உம்மை வாராமைக்கும் உரியன் என்பதை அறிவித்தலால் எதிர்மறை.

2. (i) குறவரும் மருளும் குன்று.

இதிலுள்ள உம்மை குன்றிலேயே வாழ்பவரான குறவரும் மயக்கமுறும்படியான குன்று எனப் பொருள்பட்டுக் குன்றின் உயர்வைக் காட்டுதலால் உயர்வு சிறப்பு.

(ii) புலையனும் விரும்பாத யாக்கை

இதிலுள்ள உம்மை பல மிருகங்களின் ஊனைத் தின்னும் புலையனும் விரும்பாத யாக்கை எனப் பொருள்பட்டு, யாக்கையின் இழிவைக் குறித்தலால் இழிவு சிறப்பு.

3. மூன்றாயினும் இரண்டாயினும் கொடு.

இதிலுள்ள உம்மை ஒன்றைத் துணிந்து கூறாமையால் ஐயம்.

4. ஆசிரியரும் வந்தார்.

இதிலுள்ள உம்மை முன் மாணவர் வந்தது அல்லாமல் என்னும் பொருள் தரின், இறந்தது தழீஇய எச்சம்; இனி மாணவரும் வருவார் என்னும் பொருள் தரின், எதிரது தழீஇய எச்சம்.

5. சேர சோழ பாண்டியர் மூவரும் வந்தனர்.

இதிலுள்ள உம்மை முற்றுப்பொருளைத் தருதலால்முற்று.

6. அறமும், பொருளும், இன்பமும் பெற்றேன்.

இதிலுள்ள உம்மை எண்ணி நிற்றலால் எண்.

7. இவன் உயரமானவனுமல்லன், குட்டையானவனும் அல்லன்.

இதிலுள்ள உம்மைகள் இன்னதென்று தெரிவித்து நிற்றலால் தெரிநிலை.

8. பால் மருந்தும் ஆயிற்று.

இதிலுள்ள உம்மை அதுவே உணவுமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கம்.

ந. சூ. 'எதிர்மறை சிறப்பையும் எச்சமுற்(று) அளவை
தேரிநிலை ஆக்கமோ(டு) உம்மை எட்டே.'

### கோல் என்னும் இடைச்சோல்

100. கோல் என்னும் இடைச்சொல், ஐயம், அசைநிலை ஆகிய இரண்டு பொருள்களைத் தரும்.

(உ - ம்.) 1. இன்று வருவார்கொல்!

இதில் கொல் என்பது வருவாரோ, வாராரோ என ஐயத்தைக் காட்டுதலால் ஐயம்.

2. 'என்று தருங்கொல் என வேண்டா.'

இதில் கொல் என்பது யாதொரு பொருளும் தாராது நிற்றலால் அசை நிலை.

ந. சூ. 'கோல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.'

### உரிச்சொல்

101. உரிச்சொல்லில், சில ஒரு குணத்தையும், சில பல குணங்களையும் உணர்த்தும். சால, உறு, தவ, நனி, கூர், கழி இவை மிகுதி என்னும் ஒரு குணத்தை அறிவிக்கும் உரிச்சொற்கள்.

(உ - ம்.) அவன் சாலச் சிரித்தான் — சால
உறு துயர் — உறு
தவப் பெரிது — தவ
நனி தின்றான் — நனி
நகை கூர் முகம் — கூர்
கழி உவகை — கழி

இவற்றுள் இவ்வுரிச்சொற்களெல்லாம் மிகுதி என்னும் குணத்தை உணர்த்துவது காண்க.

**102.** கடி என்னும் உரிச்சொல், காப்பு (காவல்), கூர்மை, அச்சம், மிகுதி, ஆர்த்தல், மன்றல் (கலியாணம்), கரிப்பு (காரம்) முதலிய பல பொருள்களை உணர்த்தும்.

| (உ-ம்.) | கடிநகர் புகுந்தான். | — | (கடி—காப்பு.) |
|---|---|---|---|
| | கடிவேல் கைக்கொண்டான். | — | (கடி—கூர்மை.) |
| | கடிப்பேய் உலவின. | — | (கடி—அச்சம்.) |
| | கடிமழை பெய்தது. | — | (கடி—மிகுதி.) |
| | கடிமுரசு ஒலித்தது. | — | (கடி—ஆர்த்தல்.) |
| | கடிவினை நிகழ்ந்தது. | — | (கடி—மன்றல்.) |
| | கடி மிளகு | — | (கடி—கரிப்பு.) |

பயிற்சி :

இடைச்சொல்லாவது யாது? எவையெவை இடைச்சொற்களாக வரும்? ஏகார இடைச்சொல் எந்தெந்தப் பொருள்களில் வரும்? ஓகார இடைச்சொல் எந்தெந்தப் பொருள்களில் வரும்? உம்மை இடைச்சொல் எந்தெந்தப் பொருள்களில் வரும்? கொல் என்னும் இடைச்சொல் எந்தெந்தப் பொருள்களில் வரும்? ஏகார இடைச்சொல், பிரிநிலை, வினா, தேற்றம், எண் ஆகிய பொருள்களில் வந்தமைக்கு உதாரணம் தருக. ஓகார இடைச்சொல் எதிர்மறை, தெரிநிலை, இழிவு சிறப்பு ஆகிய பொருள்களில் வந்தமைக்கு உதாரணம் தருக. உம்மை இடைச்சொல் எதிர்மறை, ஐயம், எண், முற்று ஆகிய பொருள்களில் வந்தமைக்கு உதாரணம் தருக. கொல் என்னும் இடைச்சொல் ஐயப் பொருளில் வந்ததற்கு உதாரணம் தருக. பின் வருவனவற்றிலுள்ள இடைச்சொற்கள் என்னென்ன பொருளில் வந்துள்ளன எனக் குறிப்பிடுக:—இம்மாணவருள் இவனே பரிசு பெற்றான். கந்தன் கடையானவனே. நீயோ சொல்வாய். படித்தற்கோ வந்தாய். இராமன் இருத்தற்கும் உரியன். பால் மருந்துமாயிற்று. தந்தை யாரும் வந்தார். 'என்று தருங்கொல் என வேண்டா.'

உரிச்சொல்லாவது யாது? மிகுதிப்பொருளைத் தரும் உரிச்சொற்களைக் குறிப்பிடுக. கடி என்னும் உரிச்சொல் காப்பு, மன்றல், கூர்மை, அச்சம் ஆகிய பொருள்களில் வந்தமைக்கு உதாரணம் தருக. பின் வரும் சொற்றொடர்களில் கடி என்னும் உரிச்சொல் எந்தெந்தப் பொருள்களில் வந்தது என்பதை விளக்குக:—கடி நகர் புகுந்தான், கடி வினை நிகழ்ந்தது, கடி முரசு, கடி மிளகு.

## சொற்றொடர்

### வாக்கியங்களின் வகை

103. வாக்கியங்களைத் தனி வாக்கியம், சேர்க்கை வாக்கியம், கலப்பு வாக்கியம் என மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### தனி வாக்கியம்

104. தனிவாக்கியமாவது, ஒரே விஷயத்தை அறிவிப்பதாய், ஒரு பயனிலையைப் பெற்று வருவதாம். இஃது எழுவாய், பயனிலை என்னும் இரண்டு உறுப்புக்களைப் பெற்று வரும். சில வாக்கியங்கள் செயப்படு பொருள் என்னும் மற்றோர் உறுப்பையும் பெற்று வரும்.

(உ-ம்.) 1. ஆசிரியர் வந்தார்—எழுவாய், பயனிலை என்னும் இரண்டு உறுப்புக்களைப் பெற்று வந்தது.

2. ஆசிரியர் பாடத்தைக் கற்பித்தார்—எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்னும் மூன்று உறுப்புக்களையும் பெற்று வந்தது.

### சேர்க்கை வாக்கியம்

105. சேர்க்கை வாக்கியமாவது, பல தனி வாக்கியங்கள் கூட்டிடைச் சொற்களால் சேர்க்கப்படாமலாவது, சேர்க்கப்பட்டாவது வருவதாம்.

(உ-ம்.)

அரசன் போருக்குச் சென்றான்; பகைவரை வென்றான்.

இது கூட்டிடைச் சொற்களால் சேர்க்கப்படாமல் வந்தது.

1. இராமன் நல்ல பையன்; மேலும், படிப்பிலும் சிறந்தவன்.

2. அவன் மிகவும் சிறியவன்; ஆனால், நன்றாக வேலை செய்வான்.

3. அவனுக்கு நிறையச் செல்வம் உண்டு; ஆயினும், அதனால் அவன் பயன் அடையவில்லை.

4. அவன் வெகு நாள் உழைத்தான்; ஆகையால், அதன் பயனை அனுபவிக்கிறான்.

இவை கூட்டிடைச் சொற்களால் சேர்க்கப்பட்டு வந்தன.

## கலப்பு வாக்கியம்

106. கலப்பு வாக்கியமாவது, ஒரு தனி வாக்கியமும் எச்சச் சொற்றொடர்கள் பலவும் கலந்து வருவதாம்.

107. கலப்பு வாக்கியத்திலுள்ள தனி வாக்கியம் பிரதான வாக்கியம் எனவும், எச்சச் சொற்றொடர்கள் சார்புச் சொற்றொடர்கள் எனவும் கூறப்படும். பிரதான வாக்கியமாவது, முக்கியமான வாக்கியமாம். சார்புச் சொற்றொடராவது, பிரதான வாக்கியத்தைச் சார்ந்து அதன் உறுப்புக்களைத் தழுவி வரும் சொற்றொடராம்.

108. சார்புச் சொற்றொடர்களில் சில பிரதான வாக்கியத்திலுள்ள எழுவாய்க்கு அடை மொழியாகவும், சில பயனிலைக்கு அடைமொழியாகவும், சில செயப்படுபொருளுக்கு அடைமொழியாகவும் வரும்.

(உ-ம்.)

1. அன்று பந்தயத்தில் வென்ற குதிரை பெரிது.

இதில் அன்று பந்தயத்தில் வென்ற என்பது சார்புச்சொற்றொடர். இது குதிரை பெரிது என்னும் பிரதான வாக்கியத்திலுள்ள 'குதிரை' என்னும் எழுவாய்க்கு அடைமொழியாய் வந்தது.

2. புதல்வர் பெற்றோரை அன்ன வஸ்திராதிகள் அளித்துக் காப்பாற்ற வேண்டும்.

இதில் அன்ன வஸ்திராதிகள் அளித்து என்பது சார்புச் சொற்றொடர். இது புதல்வர் பெற்றோரைக் காப்பாற்றவேண்டும் என்னும் பிரதான வாக்கியத்திலுள்ள 'காப்பாற்ற வேண்டும்' என்னும் பயனிலைக்கு அடைமொழியாய் வந்தது.

3. அந்த வீட்டில் திருடிய கள்வனைக் காவலர் பிடித்து விட்டனர்.

இதில் அந்த வீட்டில் திருடிய என்பது சார்புச் சொற்றொடர். இது கள்வனைக் காவலர் பிடித்துவிட்டனர் என்னும் பிரதான வாக்கியத்திலுள்ள 'கள்வனை' என்னும் செயப்படு பொருளுக்கு அடைமொழியாய் வந்தது.

**109.** சில சார்புச் சொற்றொடர்கள் பிரதான வாக்கியங்களின் பயனிலைக்கு எழுவாயாகவேனும், செயப்படு பொருளாகவேனும் வருவதுண்டு.

(உ-ம்.) 1. பிறர்க்குத் தம்மால் இயன்ற உதவி செய்ய வேண்டுவது மனிதர் கடன்.

இதில் பிறர்க்குத்தம்மால் இயன்ற உதவி செய்யவேண்டுவது என்னும் சார்புச் சொற்றொடர், பிரதான வாக்கியத்திலுள்ள 'கடன்' என்னும் பயனிலைக்கு எழுவாயாய் வந்தது.

2. இராமன் அங்கு விளையாடியதை நான் பார்க்கவில்லை.

இதில் இராமன் அங்கு விளையாடியதை என்னும் சார்புச் சொற்றொடர் பிரதான வாக்கியத்திலுள்ள 'பார்க்கவில்லை' என்னும் பயனிலைக்குச் செயப்படு பொருளாய் வந்தது.

**110.** சில கலப்பு வாக்கியங்களில் ஒருவனது கூற்றை அப்படியே எடுத்துக் கூறுவதாகிய நேர்க் கூற்று வாக்கியம் அமைந்து வருவதுண்டு. அவ்வாறு வருங்கால் அந்த நேர்க் கூற்று வாக்கியம் சார்புச் சொற்றொடராய், அதிலுள்ள பயனிலைக்குச் செயப்படு பொருளாய் இருக்கும்.

(உ-ம்.) "நீ இவ்வாறு செய்தது நியாயமே," என்று கோபாலன் கூறினன்.

இதில் நீ இவ்வாறு செய்தது நியாயமே என்று என்னும்நேர்க் கூற்று வாக்கியம் சார்புச் சொற்றொடராய், இக்கலப்பு வாக்கியத்திலுள்ள பயனிலையாகிய 'கூறினன்' என்பதற்குச் செயப்படு பொருளாய் இருப்பது காண்க.

**111.** நேர்க் கூற்று வாக்கியங்களை அயற்கூற்று வாக்கியங்களாக, அதாவது ஒருவன் கூறியதைப் பிறன் கூறுவது போலக் கூறும்போது, அந்த நேர்க் கூற்று மொழிகள் பிரதான வாக்கியத்தின் பயனிலைக்கு எழுவாயாகவேனும், செயப்படு பொருளாகவேனும் வரும்.

(உ-ம்.)

1. 'இராமன் கந்தனை அடித்தான்' என்பதே வேலன் கூற்று.

இதில் 'இராமன் கந்தனை அடித்தான்' என்பதே நேர்க்கூற்று. இந்நேர்க் கூற்று மொழி, பிரதான வாக்கியத்தின் பயனிலையாகிய 'கூற்று' என்பதற்கு எழுவாயாய் வந்தது.

2. 'இராமன் ஏன் அங்கு வந்தான்?' என்று வேலன் கேட்டான்.

இதில் இராமன் ஏன் அங்கு வந்தான் என்று என்னும் நேர்க் கூற்று மொழி, பிரதான வாக்கியத்திலுள்ள 'கேட்டான்' என்னும் பயனிலைக்குச் செயப்படு பொருளாய் வந்தது.

## வாக்கியங்களின் முடிபுகள்

**112.** வாக்கியங்களிலுள்ள எழுவாய் பயனிலைகள் திணை, பால், எண், இடம் இவற்றால் ஒத்து வரவேண்டும். ஒவ்வாது வேறுபட்டு வருமானால், வழுவாம். [வழு=குற்றம்.]

(உ - ம்.) அவன் வந்தது—திணை வழு.
அவள் வந்தான்—பால் வழு.
அது வந்தன —எண் வழு.
அவன் வந்தாய்—இட வழு.

**113.** ஒரு வாக்கியத்தில் பல எழுவாய்கள் வரின், பன்மை வினை முற்றால் அவற்றை முடிக்க வேண்டும்.

(உ - ம்.) இராமனும் கிருஷ்ணனும் கந்தனும் விளையாடினர்.

**114.** உயர்திணைப் படர்க்கை எழுவாயோடு அஃறிணை எழுவாயைச் சேர்த்து முடிக்க வேண்டுமானால், உயர்திணைப் பலர் பால் வினை முற்றால் முடிக்க வேண்டும்.

(உ - ம்.) கந்தனும் குதிரையும் சென்றார்கள்.

**115.** உயர்திணைத் தன்மை எழுவாயோடு அஃறிணை எழுவாயைச் சேர்த்து முடிக்கவேண்டுமானால், உயர்திணைத் தன்மைப் பன்மை வினை முற்றால் முடிக்க வேண்டும்.

(உ - ம்.) நானும் நாயும் சென்றோம்.

**116.** உயர்திணை முன்னிலை எழுவாயோடு அஃறிணை எழுவாயையும் சேர்த்து முடிக்கவேண்டுமானால், முன்னிலைப் பன்மை வினை முற்றால் முடிக்க வேண்டும்.

(உ - ம்.) நீயும் குதிரையும் சென்றீர்கள்.

**117.** தன்மை எழுவாயோடு முன்னிலை எழுவாயையாவது, படர்க்கை எழுவாயையாவது, இவ்விரண்டையுமாவது சேர்த்து முடிக்க வேண்டுமானால், தன்மைப் பன்மை வினை முற்றால் முடிக்க வேண்டும்.

(உ - ம்.) நானும் நீயும் சென்றோம்.
நானும் அவனும் சென்றோம்.
நானும் நீயும் அவனும் சென்றோம்.

**118.** முன்னிலை எழுவாயோடு படர்க்கை எழுவாயைச் சேர்த்து முடிக்கவேண்டுமானால், முன்னிலைப் பன்மை வினை முற்றால் முடிக்க வேண்டும்.

(உ - ம்.) நீயும் அவனும் சென்றீர்கள்.

பயிற்சி :

வாக்கியம் எத்தனை வகைப்படும்? அவை எவை? தனி வாக்கியம், சேர்க்கை வாக்கியம், கலப்பு வாக்கியம், சார்புச் சொற்றொடர்

இவற்றை விளக்கி ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் உதாரணம் தருக. சார்புச் சொற்றொடர் பிரதான வாக்கியத்தின் எழுவாயாக வருவதற்கு ஓர் உதாரணம் தருக. நேர்க் கூற்று வாக்கியத்தை அயற்கூற்று வாக்கியமாக்கினால், அஃது எவ்வித வாக்கியமாய் அமையும்?

பின் வரும் வாக்கியங்கள் எவ்வகையைச் சார்ந்தன என்பதைக் குறிப்பிட்டு, அவை கலப்பு வாக்கியமாயின், அவற்றிலுள்ள பிரதான, சார்புச் சொற்றொடர்கள் இவை எனக் குறிப்பிட்டுச் சார்புச் சொற்றொடர்களுக்கு முடிபும் கூறுக:—

1. கண்ணன் கடைக்குச் சென்றான். 2. கண்ணன் கடைக்குச் சென்றான்; சாமான் வாங்கினான். 3. கண்ணன் கடைக்குச் சென்று சாமான் வாங்கினான். 4. அவன் நன்றாகப் படித்தான்; அதனால் பரீக்ஷையில் தேறினான். 5. அவன் தகப்பனார் நீ இந்நேரம் வரையில் எங்குச் சென்றிருந்தாய் என்று அவனைக் கேட்டார். 6. உபாத்தியாயர் இராமனை அவன் நந்தனோடு சேரக் கூடாது என்று கூறினார். 7. நீ நல்ல இலாபம் அடைய வேண்டுமென்பதே என் நோக்கம். 8. அவன் எங்குச் சென்றான் என்பதை நான் அறியவில்லை.

பின் வரும் வாக்கியங்களிலுள்ள வழுக்களை எடுத்துரைத்து, அவற்றைத் திருத்தி அமைக்க:—

1. என் அண்ணன் கடைக்குச் சென்றாய். 2. நாயும் அவனும் வந்தது. 3. இராமனும் கிருஷ்ணனும் கோபாலனும் விளையாடினான். 4. நீயும் நானும் வந்தாய். 5. அவனும் நீயும் நானும் வந்தேன்.

## புணரியல்

**119.** புணர்ச்சியிடத்துச் சொற்கள் வேற்றுமை வழியாக வேனும், வேற்றுமையல்லாத வழியாகவேனும் ஒன்றுபடச் சேரும். வேற்றுமை வழியாகச் சேருவது வேற்றுமைப்

புணர்ச்சி என்றும், வேற்றுமையல்லாத வழியாகச் சேரு வது அல்வழிப் புணர்ச்சி என்றும் சொல்லப்படும்.

இதனால், புணர்ச்சி வேற்றுமைப் புணர்ச்சி, அல்வழிப் புணர்ச்சி என இரு வகைப்படுதலை அறிக.

## வேற்றுமைப் புணர்ச்சி

**120.** வேற்றுமைப் புணர்ச்சியில் நிலைமொழி, வருமொழி களுக்கு இடையில், இரண்டு முதல் எழு வேற்றுமை வரையிலுமுள்ள ஆறு வேற்றுமை உருபுகளும் வெளிப் படையாகவேனும், மறைந்தேனும் நிற்கப்பெறும். உருபுகள் வெளிப்படையாக நிற்பது வேற்றுமை விரி என்றும், உருபுகள் மறைந்து நிற்பது வேற்றுமைத் தொகை என்றும் சொல்லப்படும்.

**121.** வேற்றுமைப் புணர்ச்சியில் விரியாகவும் தொகை யாகவும் வருவன ஆறு வேற்றுமை உருபுகளே ஆதலின், வேற்றுமைப் புணர்ச்சி ஆறு வகைப்படுமென அறிக.

| (உ - ம்.) | வேற்றுமை விரி | வேற்றுமைத் தொகை |
|---|---|---|
| இரண்டாம்வேற்றுமை | —படத்தைவரைந்தான் | —படம்வரைந்தான் |
| மூன்றும் வேற்றுமை | —கல்லால் எறிந்தான் | —கல்லெறிந்தான் |
| நான்காம் வேற்றுமை | —இராமனுக்குத் தம்பி | —இராமன் தம்பி |
| ஐந்தாம் வேற்றுமை | —மலையின்வீழ் அருவி | —மலை வீழருவி |
| ஆறும் வேற்றுமை | —கண்ணனது கை | —கண்ணன் கை |
| எழாம் வேற்றுமை | —நெறியில் நின்றான் | —நெறி நின்றான் |

## அல்வழிப் புணர்ச்சி

**122.** அல்வழிப் புணர்ச்சியிலும் நிலைமொழி, வருமொழி களுக்கு இடையில் சொற்கள் தொக்கு நிற்பதும், தொகாது வெளிப்பட்டு நிற்பதும் உண்டு. சொற்கள் தொக்கு நிற்கப்

பெறுவது தொகை நிலைத் தொடர் என்றும், சொற்கள் தொகாமல் வெளிப்படையாக நிற்கப்பெறுவது தொகா நிலைத் தொடர் என்றும் சொல்லப்படும்.

123. தொகை நிலைத் தொடர்:—இது வினைத் தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை என ஐந்து வகைப்படும்.

1. வினைத் தொகையாவது, பெயரெச்சங்கள் காலங் காட்டும் விகுதி தொக, பகுதி மாத்திரமாய் நின்று, காலம் மறைந்து நிற்குமாறு தாம் கொண்டு முடியும் பெயர்களோடு புணருவதாம்.

(உ-ம்.) கோல் களிறு—வினைத் தொகை.

இதில் பெயரொச்சம் விகுதி குறைந்து கோல் எனப் பகுதி மாத்திரமாய் நின்று, கொன்ற, கொல்கின்ற, கொல்லும் என முக்காலத்திற்கும் பொதுவாய்க் காலம் மறைந்து நிற்க, தான் கொண்டு முடியும் பெயரோடு புணர்ந்துள்ளது காண்க.

ந. சூ. 'காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.'

2. பண்புத் தொகையாவது, பண்பு உருபாகிய ஆகிய என்பது இடையில் தொகப் பண்பை உணர்த்தும் சொல்லும், அப்பண்பை உடையபொருளை உணர்த்தும் சொல்லும் புணர்ந்து நிற்பதாம்.

(உ-ம்.) கரும்பலகை—பண்புத் தொகை

இது கருமை ஆகிய பலகை என விரியும். இதில் 'கருமை' பண்பு; 'பலகை' அப்பண்பையுடைய பொருள். இவை இடையில் 'ஆகிய' என்னும் பண்புருபு தொகப் புணர்ந்துள்ளது காண்க.

இவ்வாறன்றி, ஒரு பொருட்குப் பொதுப் பெயரும் சிறப்புப் பெயரும் ஆகிய இரண்டும் சேர்ந்து, 'ஆகிய' என்னும் பண்புருபு இடையில் தொக்குப் பண்புத் தொகை

யாய் வருவதுமுண்டு. அஃது இரு பெயரொட்டுப் பண்புத் தொகை எனப்படும்.

(உ-ம்.) மதுரைநகர்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

இது மதுரையாகிய நகர் என விரியும். இதில் 'நகர்' பொதுப் பெயர்; 'மதுரை' சிறப்புப் பெயர். இவை பண்புருபு தொகப் புணர்ந்தமை காண்க.

ந. சூ. 'பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை.'

3. உவமைத் தொகையாவது, உவம உருபுகள் இடையில் தொகச் சொற்கள் புணர்ந்து நிற்பதாம். உவம உருபுகளாவன, போல, புரைய, ஒப்ப, உறழ, மான, கடுப்ப, இயைய, ஏய்ப்ப, நேர, நிகர, அன்ன, இன்ன முதலியவைகளாம். [இவை போல என்று பொருள் படுபவை.]

(உ-ம்.) மதி முகம்—உவமைத் தொகை.

இது மதிபோன்ற முகம் என விரியும். இதில் 'போல' என்னும் உவம உருபு தொக்கு நின்றது காண்க.

ந. சூ. 'உவம உருபில(து) உவமத் தொகையே.'

ந. சூ. 'போலப் புரைய ஒப்ப உறழ
மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத்(து) உருபே.'

4. உவமைத் தொகையாவது, எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவைப் பெயர்களும், மற்றப் பெயர்களும் இடையில் உம் என்னும் உருபு தொக, ஒன்றோடொன்று சேர்ந்து வருவதாம்.

(உ-ம்.) ஐந்தேகால்; கலனேபதக்கு; சேரசோழபாண்டியர்.

இவற்றுள் உம்மை தொக்கு நிற்பது அறிக.

ந. சூ. 'எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல்
எனும்நான்(கு) அளவையுள் உம்மில(து) அத்தொகை.'

5. அன்மொழித் தொகையாவது, மேற்கூறப்பட்ட வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை ஆகிய தொகைகளின்மேல் வேறு சொற்கள் தொக்கு நிற்கப்பெற்று வருவதாம்.

(உ-ம்.)

(1) பொற்றொடி வந்தாள்.

இதில் 'பொற்றொடி' என்பது பொன்னாலான தொடியை உடையவள் எனப் பொருள்படும். இது வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

(2) தாழ் குழல் நின்றாள்.

இதில் 'தாழ் குழல்' என்பது தாழ்ந்த குழலினை உடையவள் எனப் பொருள்படும். இது வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

(3) கருங்குழல் சென்றாள்.

இதில் 'கருங்குழல்' என்பது கருமை ஆகிய குழலினையுடையவள் எனப் பொருள்படும். இது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

(4) மதி முகம் கூறினாள்.

இதில் 'மதி முகம்' என்பது மதி போலும் முகத்தினை உடையவள் எனப் பொருள்படும். இஃது உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

(5) தகர ஞாழல் பூசினாள்.

இதில் 'தகர ஞாழல்' என்பது தகரமும் ஞாழலும் சேர்ந்து உண்டாகியதொரு கலவைப் பொருள் எனப் பொருள்படும். (தகரமும் ஞாழலும் வாசனைத் திரவியங்கள்). இஃது உம்மைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

ந. சூ. 'ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி.'

124. ஒன்பது தொகா நிலைத் தொடர்களாவன:—

1. எழுவாய்த் தொடர், 2. விளித் தொடர், 3. பெய ரெச்சத் தொடர், 4. வினையெச்சத் தொடர், 5. தெரி நிலை வினை முற்றுத் தொடர், 6. குறிப்பு வினை முற்றுத் தொடர், 7. இடைச்சொற்றொடர், 8. உரிச்சொற் றொடர், 9. அடுக்குத் தொடர்.

இத்தொடர்கள் நிலை மொழியைக் கொண்டு வழங்கப் படும்.

(உ-ம்.)

1. இராமன் வந்தான்—எழுவாய்த்தொடர்.

இதில் நிலை மொழி எழுவாய் ஆதலால், இஃது எழுவாய்த் தொடராயிற்று.

2. தம்பி! வருக—விளித்தொடர்.

இதில் நிலை மொழி விளி ஆதலால், இது விளித் தொட ராயிற்று.

3. வந்த மனிதன் / பெரிய மனிதர் } பெயரெச்சத் தொடர்கள்.

இவற்றில் நிலைமொழிகள் பெயரெச்சங்கள் ஆதலால், இவை பெயரெச்சத் தொடர்களாயின.

4. வந்து சென்றார் / வலியப் பிடித்தார் } வினையெச்சத் தொடர்கள்.

இவற்றில் நிலை மொழிகள் வினையெச்சங்கள் ஆதலால், வினையெச்சத் தொடர்களாயின.

5. வந்தான் வேலன்—தெரிநிலை வினை முற்றுத் தொடர்.

இதில் நிலை மொழி தெரிநிலை வினை முற்று ஆதலால், இது தெரிநிலை வினை முற்றுத் தொடராயிற்று.

6. பெரியன் வேலன்—குறிப்பு வினை முற்றுத் தொடர்.

இதில் நிலை மொழி குறிப்பு வினை முற்று ஆதலால், இது குறிப்பு வினை முற்றுத் தொடராயிற்று.

7. மற்று அறிவாம்—இடைச்சொற்றொடர்.

இதில் நிலைமொழி இடைச்சொல் ஆதலால், இஃது இடைச்சொற்றொடராயிற்று.

8. நனி தின்றான்—உரிச்சொற்றொடர்.

இதில் நிலைமொழி உரிச்சொல் ஆதலால், இஃது உரிச்சொற்றொடராயிற்று.

9. பாம்புபாம்பு—அடுக்குத் தொடர்.

இதில் ஒரு சொல் பல முறை அடுக்கி வந்ததனால், இஃது அடுக்குத் தொடராயிற்று.

ந. சூ. 'வேற்றுமை ஐம்முதல் ஆறும்; அல்வழி
தொழில்பண்(பு) உவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளியீ ரெச்சம்முற்(று) இடைஉரி
தழுவு தொடர்அடுக்(கு) எனஈ ரேழே.'

## உயிர் முன் உயிர் புணர்தல்

**125.** நிலைமொழி ஈற்றில் இ, ஈ, ஐ என்னும் உயிர்கள் இருக்க, அவற்றின்முன் அதாவது வருமொழி முதலில் உயிர் வந்து புணர்ந்தால், இடையில் யகர உடம்படு மெய் தோன்றும்.

(உ-ம்.) மணி + எடு = மணியெடு.
தீ + எரிந்தது = தீயெரிந்தது.
இலை + எது = இலையேது?
} இ, ஈ, ஐ முன்னர் யகர உடம்படு மெய் தோன்றிற்று.

**126.** நிலைமொழி ஈற்றில் அ, ஆ, உ, ஊ, எ, ஒ, ஓ, ஔ என்னும் உயிர்கள் இருக்க, அவற்றின்முன் அதாவது வருமொழி முதலில் உயிர் வந்து புணருமானால், இடையில் வகர உடம்படு மெய் தோன்றும்.

(உ-ம்.) பல + எழுத்து = பலவெழுத்து
பலா + இலை = பலாவிலை
உரு + இது = உருவிது
பூ + எடு = பூவெடு
நொ + இல்லை = நொவ்வில்லை
கோ + அழகன் = கோவழகன்
கௌ + என்றான் = கௌவென்றான்
} அ, ஆ, உ, ஊ, எ, ஒ, ஓ, ஔ முன்னர் வகர உடம்படுமெய் தோன்றிற்று.

127. நிலைமொழி ஈற்றில் ஏகாரம் இருக்க, அதன் முன் அதாவது வருமொழி முதலில் உயிர் வந்து புணருமானால், இடையில் யகர உடம்படு மெய்யாவது வகர உடம்படு மெய் யாவது தோன்றும்.

(உ - ம்) தே+ஆரம்=தேவாரம்
அவனே+எடுத்தான்=அவனே [யெடுத்தான்
சே+அடி { சேயடி / சேவடி }

} 'ஏ' முன்னர் யகரமும், வகரமுமாகிய உடம்படு மெய்கள் தோன்றின.

ந. சூ. 'இ, ஈ, ஐவழி யவ்வும்; ஏனை
உயிர்வழி வவ்வும்; ஏமுன்இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்.'

உயிர் முன் உயிரும் மெய்யும்

128. குற்றியலுகர ஈற்றுச் சொற்களின் முன் வருமொழி முதலில் உயிரெழுத்துக்கள் வந்து புணருமானால், அக்குற்றியலுகரம் தான் ஏறியிருந்த மெய்யை விட்டு நீங்கி, வருமொழி முதலில் உள்ள உயிர்வந்து அதனோடு சேர இடங் கொடுக்கும். வருமொழி முதலில் யகரம் வந்தால், அக்குற்றியலுகரம் இகரமாம். சில முற்றியலுகரங்களும் இவ்வாறே புணரும்.

(உ - ம்.)

வீடு+அடைந்தான்=வீடடைந்தான்.
படகு+இது=படகிது.
பந்து+எடு=பந்தெடு.

} குற்றியலுகரம் தன் முன் உயிர் வரக் கெட்டது.

வீடு+யாது=வீடியாது?—குற்றியலுகரம் தன்முன் யகரம் வர இகரமாகத் திரிந்தது.

கதவு+இது=கதவிது.
கதவு+யாது=கதவியாது?

} முற்றியலுகரம் தம் முன் உயிரும் யகரமும் வர அவ்வாறே புணர்ந்தன.

## உயிர் முன் மெய் புணர்தல்

**129.** சிறப்பு விதிகளால் எடுத்துக்கூறப்படாத, இயல்பினாலாயினும் விதியினாலாயினும் நிலைமொழி ஈற்றில் நின்ற உயிர்களின்முன், வருமொழி முதலில் க, ச, த, ப என்னும் வல்லின மெய்களை உடைய சொற்கள் வந்து புணருமாயின், வருமொழிக்கு முதலாக வந்த அவ்வெழுத்துக்கள் பெரும்பாலும் மிகும்; சிறுபான்மை மிகா.

(உ-ம்.) எலி + பொறி = எலிப்பொறி
நடு + காடு = நடுக்காடு } இயல்பாக நின்ற உயிரீற்றின் முன் வல்லினம் மிகுந்தது.

கால + பெயர் = காலப்பெயர்
மண + பெண் = மணப்பெண் } விதியினால் நின்ற உயிரீற்றின் முன் வல்லினம் மிகுந்தது.

குறிப்பு:—காலம், மணம் என்னும் சொற்களில் மகர ஈற்றுப் புணர்ச்சியின்படி மகரம் கெட்டு, விதி உயிரீறாயிற்று.

(உ-ம்.) வரி + கரை = வரி கரை
தொடு + கணை = தொடுகணை } சிறுபான்மை வல்லினம் மிகாது வந்தது.

ந. சூ. 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
க ச த ப மிகும்; வித வாதன மன்னே.'

## வினாவின் முன் வல்லினம் புணர்தல்

**130.** ஈற்றில் வரும் வினாவாகிய ஆ என்பதன் முன்னும், யா வினாவின் முன்னும், விளிப்பெயர்களின் முன்னும் வருமொழி முதலில் வரும் வல்லினம் இயல்பாம்.

(உ-ம்.) வேலனா + தந்தான் = வேலனா தந்தான்? } ஈற்று ஆ வினாவின் முன் வல்லினம் இயல்பாயிற்று.

யா + பெற்றான் = யா பெற்றான்?—யா வினாவின் முன் வல்லினம் இயல்பாயிற்று.

தம்பீ + தா = தம்பீ தா.
அண்ணா + போ = அண்ணா போ. } விளிப்பெயர் முன் வல்லினம் இயல்பாயிற்று.

ந. சூ. 'ஈற்றியா விறுவிளிப் பெயர்முன் வலியியல்பே.'

### ஏ, ஓ முன் வல்லினம் புணர்தல்

**131.** நிலைமொழி ஈற்றில் வரும் ஏ, ஓ என்னும் இடைச்சொற்களின் முன் வருமொழி முதலில் வரும் வல்லினம் இயல்பாம்.

(உ - ம்.) வேலனே + சென்றான் = வேலனே சென்றான்.
இராமனோ + பாடினான் = இராமனோ பாடினான் ?

ந. சூ. 'இடைச்சொல் ஏ ஓ முன்வரின் இயல்பே.'

### மெய்ம்முன் உயிர் புணர்தல்

**132.** நிலைமொழி ஈற்றில் மெய்யெழுத்துக்கள் இருக்க வருமொழி முதலில் உயிர் எழுத்துக்கள் வந்து புணருமானால், அவ்வுயிர் அம்மெய்யின்மேல் ஏறி, உயிர்மெய் எழுத்தாகிவிடும்.

(உ - ம்.) நூல் + ஏணி = நூலேணி (ல் + ஏ = லே.)
மகன் + இவன் = மகனிவன் (ன் + இ = னி.)

ந. சூ. 'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே.'

### டுகர, றுகரஈற்றுக் குற்றியலுகரப் புணர்ச்சியில் வலி இரட்டுதல்

**133.** டுகர, றுகர ஈற்றுக் குற்றியலுகரச் சொற்கள் வருமொழிகளோடு புணருமிடத்து வேற்றுமைப் புணர்ச்சியில் பெரும்பாலும் வலி இரட்டும்.

(உ - ம்.) ஆடு + கால் = ஆட்டுக்கால்
ஆறு + ஓரம் = ஆற்றோரம்
களிறு + நிரை = களிற்று நிரை
திருடு + நாய் = திருட்டு நாய்

ந. சூ. 'நெடிலோடு உயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற்(று) இரட்டும் வேற்றுமை மிகவே.'

## மெய்ம்முன் உயிரும் மெய்யும் புணர்தல்

### மகரவீறு

134. மகர ஈற்றுச் சொற்கள் உயிரையும் மெய்யையு முடைய வருமொழிகளோடு புணருமிடத்து, அம்மகரவீறு கெட உயிரீறுபோலப் புணரும். சில மகரவீற்றுச் சொற்கள் வல்லினங்களோடு புணருமிடத்து அவ்வல்லினங்கட்கு இனமான மெல்லினங்களாகத் திரிவதும் உண்டு.

(உ - ம்.) வட்டம் + ஆழி = வட்டவாழி

மகரவீற்றுச்சொல் உயிர் வர மகரம் கெட்டு உயிரீறு போல உடம்படு மெய் பெற்றது.

பணம் + பை = பணப்பை.

மகரவீற்றுச்சொல் வல்லினம்வர மகரம்கெட்டு உயிரீறுபோல வந்த வல்லினம் மிக்கது.

மரம் + நார் = மரநார்

மகரவீற்றுச்சொல் மெல்லின இடையினங்கள் வர மகரம் கெட்டு உயிரீறு போல இயல்பாயிற்று.

இடம் + தந்தான் = இடந்தந்தான்.

வலம் + சென்றான் = வலஞ்சென்றான்.

சில மகர ஈற்றுச் சொற்களிலுள்ள மகரம் வல்லினம் வர அதற்கினமான மெல்லினமாகத் திரிந்தது.

ந. சூ. 'மவ்வீ(று) ஒற்றழிந்(து) உயிரீ(று) ஒப்பவும்
வன்மைக்(கு) இனமாத் திரிபவும் ஆகும்.'

## மெய்ம்முன் மேய் புணர்தல்

### ணகர னகர ஈறு

135. ணகர னகர ஈற்றின்முன் வருமொழி முதலில் வேற்றுமைப் புணர்ச்சியில் வல்லினம் வந்தால், அந்த ணகர

னகரங்கள் முறையே டகர றகரங்களாகத் திரியும்; மெல் லின இடையினங்கள் வந்தால், இயல்பாம். அல்வழிப் புணர்ச்சியில் மூவின மெய்களும் வர இயல்பாம்.

(உ - ம்.)

| | |
|---|---|
| மண் + கலம் = மட்கலம்<br>பொன் + காசு = பொற்காசு | வல்லினம் வர ணகர னகரங்கள் வேற்றுமையில் டகர றகரங்களாயின. |
| மண் + மாட்சி = மண் மாட்சி<br>பொன் + மாட்சி = பொன் மாட்சி<br>மண் + வளம் = மண் வளம்<br>பொன் + வளையல் = பொன்வளையல் | மெல்லின இடையினங்கள்வரவேற்றுமையில் ணகர னகரங்கள் இயல்பாயின. |
| கண் + பெரிது = கண் பெரிது.<br>மண் + மாண்டது = மண் மாண்டது.<br>கண் + வலித்தது = கண் வலித்தது.<br>அவன் + கண்டான் = அவன் கண்டான்.<br>அவன் மெலிந்தான் = அவன் மெலிந்தான்.<br>மகன் + வந்தான் = மகன் வந்தான். | மூவின மெய்களும் வர, அல்வழியில் ணகர னகரங்கள் இயல்பாயின. |

ந. சூ. 'ணனவல் லினம்வரட் டறவும், பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக்(கு); அல்வழிக்(கு)
அனைத்துமேய் வரினும் இயல்பா கும்மே.'

## லகர ளகர ஈறு

**136.** நிலைமொழி ஈற்றில் லகர ளகரங்கள் இருக்க வருமொழி முதலில் வல்லினம் வந்தால், வேற்றுமைப் புணர்ச்சியில் அந்த லகர ளகரங்கள் முறையே றகர டகரங்களாகத் திரியும்; அல்வழியில் இயல்பும் விகற்பமும் ஆகும்; மெல்லினம் வந்தால், வேற்றுமை, அல்வழி ஆகிய இரு வழியிலும் அவை முறையே னகர ணகரங்களாகத் திரியும்; இடையினம் வந்தால், இரு வழியிலும் இயல்பாம்.

(உ-ம்.)

| | |
|---|---|
| கல் + குறை = கற்குறை<br>கள் + குடம் = கட்குடம் | வல்லினம் வர லகர ளகரங்கள் வேற்றுமையில் றகர டகாரங்களாகத் திரிந்தன. |
| கல் + குறிது = கல்குறிது / கற்குறிது<br>முள் + பெரிது = முள்பெரிது / முட்பெரிது | வல்லினம்வர லகர ளகரங்கள் அல்வழியில் விகற்பித்தன. |
| கல் + மாண்டது = கன்மாண்டது<br>என் + முளைத்தது = எண்முளைத்தது — அல்வழி<br>கல் + மாண்பு = கன்மாண்பு<br>வாள் + மாண்பு = வாண்மாண்பு — வேற்றுமை | லகர ளகரங்கள் இருவழியிலும் மெல்லினம் வர னகர ணகரங்களாயின. |
| வால் + யாது = வால்யாது?<br>வாள் + வலிது = வாள்வலிது — அல்வழி<br>கல் + யானை = கல்யானை<br>தோள் + வலி = தோள்வலி — வேற்றுமை | லகர ளகரங்கள் இருவழியிலும் இடையினம் வர இயல்பாயின. |

ந. சூ. 'லளவேற் றுமையிற் றடவும், அல்வழி
அவற்றோ(டு) உறழ்வும் வலிவரின் ஆம்;மேலி
மேவின் னணவும், இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப.'

மையீற்றுப் பண்புப் பெயர்ப் புணர்ச்சி

**137.** மையீற்றுப் பண்புப் பெயர்கள் புணர்ச்சியிடத்துப் பல வித விகாரங்களை அடையும். அவையாவன :—ஈறு போதல், இடை உகரம் இ ஆதல், ஆதி நீளுதல், அடி அகரம் ஐ ஆதல், தன் ஒற்று இரட்டல், முன் நின்ற மெய் திரிதல், இனம் மிகல் முதலியன.

(உ-ம்.) பெருமை + வாழ்வு = பெருவாழ்வு — (மை விகுதி கெட்டது) ஈறு போதல்.

கருமை + அன் = கரியன் = (இடையில் உள்ள ரு, ரி ஆகத் திரிந்தது) இடை உகரம் இ ஆதல்.

பசுமை + இ = பாசி—(முதலில் உள்ள ப, பா என நீண்டது) ஆதி நீளுதல்.

பசுமை + தார் = பைந்தார்—(முதலில் உள்ள ப, பை ஆயிற்று) அடி அகரம் ஐ ஆதல்.

சிறுமை + ஆறு = சிற்றாறு—(இடையில் உள்ள றகரவொற்று இரட்டித்தது) தன் ஒற்று இரட்டல்.

செம்மை + ஆம்பல் = சேதாம்பல்—(இடையில் உள்ள மகர மெய், தகர மெய்யாகத் திரிந்தது) முன் நின்ற மெய் திரிதல்.

பெருமை + தேர் = பெருந்தேர்—(வருமொழி முதலாக வந்த தகர மெய்க்கு இனமான நகர மெய்யாகத் திரிந்தது) இனம் மிகுதல்.

ந. சூ. 'ஈறு போதல் இடைஉகரம் இஆதல்
ஆதி நீடல் அடிஅகரம் ஐஆதல்
தன்னொற்(று) இரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற்(கு) இயல்பே.'

பயிற்சி:

வேற்றுமைப் புணர்ச்சியாவது யாது? அல்வழிப் புணர்ச்சி யாவது யாது? வேற்றுமைப் புணர்ச்சி எத்தனை வகைப்படும்? வகைக்கு ஒவ்வோர் உதாரணம் கூறுக. அல்வழிப் புணர்ச்சி எத்தனை வகைப்படும்? வகைக்கு ஒவ்வோர் உதாரணம் கூறுக. வேற்றுமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமைத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை இவற்றை விளக்குக. தொகா நிலைத் தொடர்கள் எத்தனை வகைப் படும்? அவை எவை? பெயரெச்சத் தொடர், வினையெச்சத் தொடர், எழுவாய்த் தொடர், இடைச்சொற்றொடர் இவற்றிற்கு

ஒவ்வோர் உதாரணம் கொடுக்க. பின்வரும் உதாரணங்கள் இன்ன தொகை அல்லது இன்ன தொடர் எனக் கூறுக:—நிலம் கடந்தான், கல்லெறிந்தான், வீடு புகுந்தான், ஊரின்கண் இருந்தான், சுடுசோறு, பிறைநுதல், பைந்தொடி சென்றாள், தீகாஞாழல், அண்ணா! வா, நாய் ஓடிற்று, வந்தான் சாத்தன், கனியுண்டான்.

பின்வரும் சொற்களைப் புணர்த்திப் புணர்ச்சி விதி கூறுக:— கிளி + அழகு; சே + அடி; வீடு + இடிந்தது; நாடு + யாது; கதவு + யாது; கல் + எறிந்தான்; மனம் + குறை; இடம் + சிறிது; மண் + கலயம்; பொன் + வளையல்; கல் + சிறிது; என் + விளைந்தது; பெருமை + அன்; நன்மை + மகன்; பசுமை + இ; செம்மை + ஆம்பல்; பசுமை + தார்.

## சொல்லிலக்கணம் கூறுதல்

வேந்தன் பகைவரை வென்று கோணர்ந்த பொருள்களைப் பரிசிலர்க்கு அளித்தான்.

வேந்தன்—ஆண்பாற் படர்க்கைப் பெயர் முதல் வேற்றுமையை ஏற்று, 'அளித்தான்' என்னும் வினை முற்றிற்கு எழுவாயாகி, அதனைக் கொண்டு முடிந்தது.

பகைவரை—பலர் பாற்படர்க்கைப்பெயர் இரண்டாம் வேற்றுமையை ஏற்று, 'வென்று' என்னும் வினையெச்சத்திற்குச் செயப்படு பொருளாக வந்தது.

வென்று—'செய்து' என்னும் வாய்பாட்டு வினையெச்சம், 'கோணர்ந்த' என்னும் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது.

கோணர்ந்த—'செய்த' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம், 'பொருள்களை' என்னும் பெயரைக் கொண்டு முடிந்தது.

பொருள்களை—பலவின்பாற் படர்க்கைப் பொருட்பெயர் இரண்டாம் வேற்றுமையை ஏற்று, 'அளித்தான்' என்னும் வினை முற்றுக்குச் செயப்படு பொருளாக வந்தது.

பரிசிலர்க்கு—பலர் பாற்படர்க்கைப் பெயர் நான்காம் வேற்றுமையை ஏற்றுக் கொடைப் பொருளாகி, 'அளித் தான்' என்னும் வினை முற்றைக் கொண்டு முடிந்தது.

அளித்தான்—ஆண் பாற்படர்க்கை இறந்த கால வினை முற்று, 'அரசன்' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக வந்தது.

பயிற்சி:

பின்வரும் வாக்கியங்களிலுள்ள சொற்களுக்குச் சொல்லி லக்கணம் கூறுக:—1. இராமர் வில்லை ஒடித்துச் சீதையை மணம் செய்துகொண்டார். 2. துரோணர் கௌரவருக்கும், பாண்ட வருக்கும் வில் வித்தை கற்பித்தார். 3. அப்பூதி அடிகளின் இறந்த குமாரனை அப்பர் பிழைப்பித்தார்.

## பகு பத இலக்கணம் கூறுதல்

1. வானத்தான்—(வானம் + அத்து + ஆன்) வானம் - பகுதி ; அத்து - சாரியை ; ஆன் - ஆண் பால் விகுதி.

2. எச்சம்—(எஞ்சு + அம்) எஞ்சு - பகுதி ; அம் - தொழிற்பெயர் விகுதி ; பகுதியில் ஞ், ச் ஆக மாறியது வலித்தல் விகாரம்.

3. வருகின்றனன்— (வா + கின்று + அன் + அன்) வா - பகுதி ; கின்று - நிகழ் கால இடை நிலை ; அன்- சாரியை ; அன் - ஆண் பால் விகுதி ; பகுதி முதல் குறுகிய தும் ரு விரிந்ததும், முறையே குறுக்கல் விகாரமும் விரித்தல் விகாரமுமாம்.

4. இல்லாத— (இல்+ஆ+த்+அ) இல் - எதிர்மறைப் பண்புப் பகுதி; ஆ - சாரியை; த் - எழுத்துப் பேறு; அ - பெயரெச்ச விகுதி.

பயிற்சி:

பின் வரும் பதங்களுக்குப் பகு பத இலக்கணம் கூறுக:— பொன்னன், நடக்கை, நட்பு, நன்றி, கற்றான், தருகின்றனன், இருப்பான், அல்லாத, சென்று, செல்ல, வந்தான்.

## தொடரிலக்கணம் கூறுதல்

தொடரிலக்கணம் கூறுதலாவது, சொற்றொடர்கள் தொகை நிலை, தொகா நிலை என்பவற்றுள் இன்ன வகையால் தொடர்ந்து வந்துள்ளன எனக் கூறுதலாம்.

1. 'கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டின் கடும் புலி வாழும் காடு நனி நன்று.

கொடுங்கோல் (கொடுமை ஆகிய கோல்)—பண்புத் தொகை; கொடுங்கோல் மன்னன் (கொடுங்கோலை உடைய மன்னன்)—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை; மன்னன் வாழும்—எழுவாய்த் தொடர்; வாழும் நாட்டின்—பெயரெச்சத் தொடர்; நாட்டின் நன்று—ஐந்தாம் வேற்றுமைத் தொடர்; நாட்டின் கடும்புலி—தழாத்தொடர்; (தழாத் தொடராவது, பொருள் பொருத்த முறத் தழுவாத தொடராம்.); கடும்புலி (கடுமையுடைய புலி)—இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை; கடும்புலி வாழும்—எழுவாய்த் தொடர்; வாழும் காடு—பெயரெச்சத் தொடர்; காடு நன்று—எழுவாய்த் தொடர்; காடு நனி—தழாத் தொடர்; நனி நன்று—உரிச்சொற்றொடர்.

2. 'வந்தான் வந்தான் இராமன்' என்று அநுமான் நந்திக் கிராமத்தில் இருந்த பரதனுக்குக் கூறினான்.

*வந்தான் வந்தான்—அடுக்குத்தொடர்; வந்தான் இராமன்—தெரிநிலை வினை முற்றுத் தொடர்; இராமன் என்று—தழாத் தொடர்; என்று கூறினான்—இடைச்சொற்றொடர்; என்று அநுமான்—இடைச்சொற்றொடர்; அநுமான் கூறினான்—எழுவாய்த் தொடர்; அநுமான் நந்திக்கிராமத்தில்—தழாத்தொடர்; நந்திக்கிராமம்—இரு பெயரொட்டுப் பண்புத் தொகை; நந்திக்கிராமத்தில் இருந்த—ஏழாம் வேற்றுமைத் தொடர்; இருந்த பரதனுக்கு—பெயரெச்சத் தொடர்; பரதனுக்குக் கூறினான்—நான்காம் வேற்றுமைத் தொடர்.*



பயிற்சி:

*பின் வரும் வாக்கியங்களிலுள்ள தொடர்களுக்குத் தொடரிலக்கணம் கூறுக:—1. இரப்போர்க்கு இல்லை என்னாமல் தருமம் கொடுத்தல் நலம். 2. பிச்சை புகினும் கற்கை நன்றே. 3. நூறு ஆண்டு பழகினும் மூர்க்கர் சிநேகம் நிலைத்து நில்லாது. 4. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.*



Printed at the Jupiter Press, Madras.